தானாத மாலை யடுத்துமட லேந்தினேன்
தேனார்வா யூறநின்று தேங்கினேன் - ஆனாத 462
வண்டு விழக்கண்ணீர் மல்கினேன் பொன்பூத்தேன்
விண்டலர் தூற்ற வெளிநின்றேன் - மண்டி 463
வருமார்வத் துற்றேன் மலர்க்கொன்றை யானேன்
திருமார்வத் துற்றணையச் செய்துன் - அருடாராய் 464
என்றாளை நோக்கி யிடர்நோக்கிச் சம்பரனை
வென்றானை யீசன் விலக்கினான் - நின்றாளப் 465
பேதை முதலாகப் பேரிளம் பெண்ணீறாக
மாதர் பலர்மயங்க மாதேவன் - சோதிப் 466
படர்வார் சடையெம் பரம்பர னென்றும்
அடைவார் வினைதீர்க்கு மம்மான் - அடியார் 467
குழாமறாச் சந்நிதியெங் கோமா னதிரும்
முழாவறாக் கோயின் முதல்வன் - விழாவறாத் 468
தேருடையா னெங்க டிருப்பூ வணக்காசி
ஊருடையான் போந்தா னுலா. 469

திருப்பூவணநாதருலா முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

462 - 4. சிலேடை : தேங்குதல் - நிறைதல், நிலைகுலைதல். வண்டு- வண்டுகள், வளையல்கள். கண்ணீர் - கள் நீர், விழிநீர். பொன்பூத்தல் - பொன்னிறத்ததாகப் பூத்தல், பசலைநிறமடைதல். அலர் - மலர், பலர் கூறும் பழிமொழி. வரும் மார்பம், வரும் ஆர்வம்; மார்பமென்பது மார்வ மென்றும் வழங்கும்; "புயந்தழுவுங் கண்ணியுஞ்செவ் விதழி யேமால் பூண்ட கயற் கண்ணியுஞ்செவ் விதழி யேமால், வியந்து சொலி னன்ன தும்பொன்னிறமே யெங்கண் மின்னிறமும் பொன்னிறமே புயம்பெறாமல் அயர்ந்திவள் வாடத்தகுமோ வருட்கண்பாரீ ரருணகிரிப் பெரியீரே யமல ரேநல், வயந்த விழா வழகரே நினைக்க முத்தி வரந்தருவா ரேமலைமேன் மருந்தனாரே" (அருணைக். 14) என்ற அருமைச் செய்யுளிலும் இப் படியேவேறொரு வகையாகக் கொன்றையைத் தலைவிக்கு உவமை கூறி யிருத்தல் காண்க.

465. சம்பரனை வென்றானை - சம்பராசுரனைச் சயித்த மன்மதனை; "சம்பரனுக் கொருபகைவா" (கந்த. காமதகன. 99)

## அழகியநாயகர் துதி

தன்னனையார் தந்தையார் தமராரென் றறியாமற் றனித்தவுன்னைப், பொன்னனையார் வயிற்கருவிப் புகுந்த தனுன் முத்தமிட்டுப் புதல்வன்போல, மின்னனையா ரிடம் பிரியா மணவாள னெனப்புரிந்த விதத்தாலன்றே, என்ன னையார் களுந்தரிசித் தேத்தினர் பூவணத்துறைந்தா யெளிதிற்றனே.

---

## சிறப்புப்பாயிரம்

திருவால வாயரெலாம் வலசித்த ரிரதவா தஞ்செய் தற்கா, வருவாரை வணங்கவவர் மணிமுறுவல் சிறிதரும்பி மலர்க்கணேக்கக், கருவாகிப் பொன்னனையாள் பெற் றெடுத்த புத்திரனேர் கந்த சாமி, பெருவாய்மைப் பூவை யுலாப் பாடியதெம் போலியர்கள் பிழைக்கத் தானே.

[இந்த இரண்டும் பழைய செய்யுட்கள்]

மணிமந்திர விநாயகர் துணை

---

அழகியநாயகர் துதி

தன் அன்னையார். வயின் - இடம், வயிறு. கரு - திருவுருவம்வார்த் தற்குக்கட்டிய கரு, கருப்பம்.

சிறப்புப் பாயிரம்

'பொன்னனையாள் பெற்றெடுத்த புத்திரனேர் கந்தசாமி' என்றது இந்நூலாசிரியர் ஓர் உருத்திரகணிகையின் புதல்வரென்பதைக் குறிப் பிக்கின்றது.

---

Kabeer Printing Works, Madras (3206)

கணபதி துணை.

# முகவுரை.

"காளத்தி காணப் பெற்ற கண்களே கண்க ளென்றுங்
காளத்தி நகருக் கேகுங் கால்களே கால்க ளென்றுங்
காளத்தி புசங்க ருத்தே கருத்தென்றுங் கைகூ நாமக்
காளத்தி புகழு நாவே நாவென்றுங் கற்றோர் சொல்வர்."

**உலா**வென்பது, தமிழ்ப்பாஷைக்குரிய தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒருவகைநூல்; ஒருதலைவன், *பேதைமுதற் பேரிளம்பெண் ஈறாகிய ஏழுபருவ மகளிர்களும் தன்னைக்கண்டு காதல்கூரும்படி † வீதியிற் பவனிபோந்தானென்று கலிவெண்பாவாற் கூறல்வேண்டுமென்பது அந்நூலுக்குரியவிதி. இதனை, "திறந்தெரிந்த பேதை முதலெழுவர் செய்கை, மறந்தயர வந்தான் மறுகென்-றறைந்தகலி, வெண்பா வுலாவாம்" என்னும் வச்சணந்திமாலையால் உணர்க. இப்பிரபந்தத்தின் இலக்கணவிரிவு, பன்னிருபாட்டியல்முதலிய பழைய பாட்டியல்களில் விளங்கக் காணப்படும்.

தாம் வழிபடுதற்குரிய கடவுளர்மீதும் தம்மையாதரித்த தலைவர்கள்மீதும் பண்டைக்காலந்தொடங்கிப் பெரியோர்கள் செய்துபோந்த பற்பல உலாக்கள் இத்தமிழ்நாட்டில் வழங்கிவருகின்றன. **ஆதியுலா** முதலியவைகளும், **மூவருலா** முதலியவைகளும் மேற்கூறிய இருபகுதிகளுக்கும் முறையே உதாரணங்களாகும்; அவற்றுள்,

**திருக்காளத்திநாதருலா**வென்பது, திருக்காளத்தியிற் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் சிவபெருமான்மீது சேறைக்கவிராசபிள்ளையென்னும் கவிஞர்பெருமான் இயற்றியது; இதில், ருள அ - கண்ணிகள் உள்ளன.

பாட்டுடைத்தலைவராகிய திருக்காளத்திநாதருடைய பெருங்கருணைத்திறமும், இத்தலவிசேடமும், தீர்த்தவிசேடங்களும், இங்கேவழிபட்டுப் பேறுபெற்ற மெய்யன்பர்களுடைய அருமை பெருமைகளும், வேறுதலங்களின் விசேடங்களும், பழைய சிவபுராணங்களிலுள்ள விசேட சரித்திரங்களும், தேவார திருவாசகமுதலிய அருட்பாக்களிலுள்ள அருமைப்பிரயோகங்களும், பொருளை வருத்தமின்றி இனிது விளக்கும் பலவகையான மடக்கணிகள், சிலேடைகள், கேட்டோர் வியத்தற்குரிய தொனிகள் முதலியனவும், அக்காலத்தில் இத்தலத்திலிருந்தமடங்கள் இன்னவென்பதும், இத்திருக்கோயிற்குரிய பலவகையான திருத்தொண்டுசெய்துபோந்தவர்கள் இன்ன இன்னவகையாரென்பதும், பிறவும் இந்நூலிற் காணலாகும்.

---

* பேதைமுதல் ஏழுபருவமாதர்களாவார்: பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்பவர்கள்.

† வீதியென்றது இங்கே உருத்திரகணிகையர்வீதியை; கருரு-சு.

எனக்குத் தோற்றியவளவு ஏதோ ஒருவாறு குறித்திருக்கும் அரும்பதவுரையை அறிஞர்கள் பொறுத்து அங்கீகரிப்பார்களென்று நம்புகிறேன்; சிலகண்ணிகளின் கருத்து விளங்காமையால், அவற்றிற்குப் பொருளெழுதவில்லை. கூஈ-ஆம் கண்ணியிற் சிவபெருமான் இத்தலத்தில் ஆகாயவடிவாக எழுந்தருளியிருக்கின்றனரென்று கூறியிருப்பதற்குத் தக்கஆதாரம் கிடைக்கவில்லை.

கையெழுத்துப் பிரதிகளுள் ஒன்றன் தலைப்பில்மட்டும் இந்நூல் இரட்டையர்களியற்றியதென்று எழுதப்பட்டிருந்தது; சேறைக் கவிராசபிள்ளை இயற்றியதாகத் தக்க ஆதாரங்கள் கிடைத்தமையாலும் அவரியற்றிய வேறு உலாக்களுக்கும் இதற்குமுள்ள (பிம்பப் பிரதிபிம்பம்போன்ற) நடையொற்றுமையாலும் இரட்டையர்களுடைய செய்யுணடைக்கும் இதற்குமுள்ள வேறுபாட்டினாலும் இஃது இவரியற்றியதென்றே நிச்சயிக்கலாயிற்று.

இந்நூல் ஸம்பந்தமாக அறியவேண்டியவற்றை அறிந்துகொள்ளுதற்கு நான் முன்பு திருக்காளத்திக்குப் போயிருந்தபொழுது அங்கே மானேசராக இருந்த ஸ்ரீ எ. எஸ். பொன்னுஸாமி ஐயரவர்கள் வேண்டிய சகாயம் செய்தார்கள்

இந்நூற் பரிசோதனை முதலியவற்றிற்கு அக்காலத்தில் உடனிருந்தவர்களுள் சென்னை நியூயிங்டன் ஸ்கூல் தமிழ்ப்பண்டிதராக இருந்த ஸ்ரீ திரு. கிருஷ்ணையரவர்கள் மிக்க அன்புடன் செய்துவந்த பேருதவி மறக்கற்பாலதன்று.

அரும்பதவுரையும் பாடபேதங்களும் படிப்பவர்களுக்கு உபயோகமாக இருக்குமென்று கருதி இந்தப்பதிப்பில் மூலபாகமுள்ள அந்த அந்தப்பக்கங்களில் அடிக்குறிப்பாகப் பதிப்பிக்கப்பெற்றுள்ளன.

இப்பதிப்பின் பரிசோதனைக்குத் திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்துப் பிரதி க-ம், திருநெல்வேலி மேலைரதவீதி ஸ்ரீ அம்பலவாண கவிராயரவர்கள் வீட்டுப் பிரதி க-ம், மேலகரம், ஸ்ரீ சண்பகக் குற்றாலக்கவிராயரவர்கள் வீட்டுப்பிரதி க-ம், சென்னை, சூளை, ஸ்ரீ அப்பன்செட்டியாரவர்கள் வீட்டுப் பிரதி க-ம், மன்னார்கோயில் தாலூகா, கொச்சியூர், ஸ்ரீ வைத்தியலிங்க சேர்வைகாரரவர்கள் வீட்டுப்பிரதி க-ம், ஸ்ரீ கனகசபைச் சேர்வைகாரரவர்கள் வீட்டுப் பிரதி க-ம், சென்னை, ஸ்ரீ தோ. வே. திருநாகேசுவர முதலியாரவர்கள் வீட்டுப் பிரதி க-ம், சென்னை, ஸ்ரீ முத்துக்குமாரசாமி முதலியாரவர்கள் வீட்டுப் பிரதி க-ம் கிடைத்தன.

மேலேகாட்டிய உபகாரிகளை நான் எப்போதும் ஞாபகத்தில் வைத்திருப்பதையன்றி அவர்களுக்கு யான் செய்யக்கூடியது யாது?

சென்னை,<br>20—6—25.

இங்ஙனம்,<br>**வே. சாமிநாதையன்.**

# நூலாசிரியர் வரலாறு.



இந்நூலாசிரியராகிய சேறைக் கவிராசபிள்ளையின் இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை; வீரைக்கவிராசபண்டிதர், செங்கோட்டைக்கவிராசபண்டாரமென்னும் பெயர்களை நோக்குங்கால், பண்டைக்காலத்திற் சிலருக்குக் கவிராசரென்றே இயற்பெயர் இருந்ததாகத் தெரிகின்றது.

சேறைக்கவிராச பிள்ளையென்று இவர்பெயர் வழங்குதலால், இவரது ஊர் சேறையென்று தெரிகின்றது; சேறையென்பது சோழநாட்டிலுள்ளதும் தேவாரம் பெற்றதுமாகிய திருச்சேறையென்பதோ அல்லது சேற்றூரென்பதன் மரூஉவோ யாதும் தெரிந்திலது. இந்நாட்டிற் சேற்றூரென்றுபெயருள்ள ஊர்கள் பலவுள்ளன. இவர், ஒருசமயத்திற் பாண்டிநாட்டினரைநோக்கி, 'இந்தத் தேசப் புலவர் மனத்துக் கிடியென வந்தேன்காண்' (௫) என்று கூறியிருத்தலின், பாண்டிநாட்டினரல்லரென்று கருதப்படுகிறார்.

இவர் சாதியாற் கருணீகர்; இதனை, 'கருணேசன் சேறைக் கவிராசராசன்' (௩) என்பதனு லுணர்க.

சைவசமயம் பூண்டொழுகியவர்; முருகக்கடவுளை உபாசித்து மந்திரசித்திபெற்றவர்.

தமிழிலக்கண இலக்கிய நூல்களிலும் சைவசித்தாந்த சாஸ்திரங்களிலும் சிவபுராணங்களிலும் மிக்க பயிற்சியுள்ளவர். சொல்லினிமை பொருளினிமை வாய்ந்த அதிவிசித்திரகரமான செய்யுட்கள்செய்தலில் வல்லவர். இவருடைய செய்யுட்கள் செம்பாகமானவைகள். இவர் இன்னாரென்பது இவருடைய நூல்களுள் ஏதேனும் ஒருபாகத்தைப் படித்தறியும் விவேகிகளுக்கு நன்குபுலப்படும்.

தமிழ்ப்புலவர்கள்பால் மிக்க வணக்கமுடையவர்; வாதுக்கு வந்தோர்களை வென்று அடக்கும் ஆற்றலுமுடையவர்; ௪, ௫.

செய்யுட்களை விரைந்துசெய்யும் ஆற்றலுடையவராயிருந்தமையின் ஆசுகவிராசரென்றும், அங்ஙனம்பாடும் புலவர்பலரினும் மேம்பட்டு விளங்கினமையின் ஆசுகவிராசராசரென்றும், ஆசுகவிராசசிங்கமென்றும், வண்ணம் பாடுதலில் மிக்க ஆற்றலுடையவராக இருந்தமையின் வண்ணக்களஞ்சியமென்றும் வழங்கப்பெற்றவர். இவர் வண்ணம்பாடுதலில் மிக்க ஆற்றலுடையவரென்பதற்கு "சிலைக்காம னுடலெரிய" என்னும் திருவண்ணாமலையார் வண்ணத்தில் உ-ஆம் கலையிற் சிவஸ்தலப்பெயர்களை அடைமொழியின்றி அமைத்திருத்தலே போதிய சான்றாகவுள்ளது.

திருக்காளத்தியிலிருந்தவரும் செங்குந்தர் மரபினரும் சிவபத்திச் செல்வம் வாய்ந்தவருமாகிய வேங்கடராசமுதலியாரென்னும் பிரபுவின் அருமைப் புலவராகவிருந்து அவரால் அன்புடன் ஆதரிக்கப்பெற்று அந்தத்தலத்திற் பெரும்பாலுந்தங்கிக் காலங்கழித்தவர். அவர்பால் மிக்க நன்றியறிவுடையவர்; 'தக்கிண கயிலையில்வாழ், செங்குந் தக்குல வேங்கட ராயன் றிருவாசற்புலவன்' (௫)எனத் தம்மை இவர் புலப்படுத்தியிருத்தலால் இதனையுணர்க. திருக்காளத்திநாதருலாவைச் செய்வித்தவர் மேற்கூறிய பிரபுவாகவேயிருக்க வேண்டுமென்றும் இதனால் தெரிகிறது. அந்தப் பிரபுவினாலும் பிறகொடையாளிகளாலும் பல்லக்குவரிசை முதலியனவும் மிக்க பரிசில்களும் பெற்றவர்.

பாண்டிநாட்டிலிருந்த சீவலிமாறருடைய பரம்பரையைச் சார்ந்தவரும் இராமபாண்டியரென்று பெயர்பெற்றவருமாகிய சிற்றரசரொருவரிடம் சென்று விரைவாகப்பாடும் தம்முடைய ஆற்றலைப் புலப்படுத்தி அவரை வியப்புறச்செய்து பலபரிசில்கள் பெற்றுமீண்டவர்; ரு.

திருவண்ணாமலைநாதர்மீது வண்ணம்பாடிக்கொண்டு அரங்கேற்றுதற்காக அத்தலத்திற்கு இவர் பலசிறப்புடன் சென்றாரென்றும், அக்காலத்தில் அவ்வூரிலிருந்த உண்ணாமுலையெல்லப்பநயினாரென்னும் தமிழ்ப்புலவர் இவர் வரவைக்கண்டு அஞ்சி ஒதுங்கி மறைந்தாரென்றும், அதுதெரிந்த பரமேசுவரப்புலவரென்பவர் அவரை அவமதித்துக்கூறினரென்றும் தெரிகின்றனை; சு.

அந்தகக்கவி வீரராகவமுதலியார், தாமியற்றிய *சேயூர் முருகன்பிள்ளைத்தமிழில் (அம்புலி. ௧0) 'தவிராத' என்னுஞ் செய்யுளில் இவர்செய்த சேயூர் முருகனுலாவைப் பாராட்டிக்கூறியிருத்தலால், இவருடைய காலம் அவருடையகாலத்திற்கு முந்தியதென்று தெரிகின்றது. தமிழ்நாவலர்சரிதையில் அம்முதலியாருடைய செய்யுட்களுக்கு முன்னே இவருடைய செய்யுட்கள் வைக்கப்பெற்றிருத்தலும் இதனை வலியுறுத்தும். தமிழ்நாட்டிலும் ஈழநாட்டிலும் கவிஞர்பெருமானென்று புகழ்படைத்து விளங்கிய அம்முதலியார் மேற்கூறியசெய்யுளில் திருமுருகாற்றுப்படை, திருப்புகழ், கந்தபுராணமாகிய இவற்றின்வரிசைகளில இவரியற்றிய உலாவின்பெயரை வைத்திருத்தலன்றி, 'திருவுலாவைக்கற்றுருகலாம்' என்றும் அருமையாகப் பாராட்டிக்கூறியிருத்தல் இவருடைய வாக்கின் உயர்வையும் அதன் நடையின் இனிமையையும் அதிலமைந்துள்ள பத்திச்சுவையையும் விளங்கச்செய்கின்றது.

மேற்கூறிய சேயூர் முருகனுலாவில், 'சேறைக் கவிராசன், சொன்னவுலாப்படித்துச் சோதிப்பெற்ற தாலாட்டி' (உ) என்று கூறியிருத்தலையும், திருக்காளத்திநாதர் இட்டகாமியமாலையில், "செவிராசியம்" என்னும் ௭௮-ஆம் செய்யுளில், 'புவிராச பாண்டியன் சித்தத்துக கேற்பப் புகன்ற சித்ர, கவிராசராச கயிலா புரேசநங் காளத்தியே' என்று துதித்திருத்தலையும் பிறசெய்யுட்களில் இங்ஙனங்கூறியிருத்தலையும் நோக்குமிடத்தில் தம்முடைய வாக்கில் தம்முடைய பெயரையும் தம்முடையசெய்யுளையதையும் எந்தவகையாகவாவது எடுத்துக்காட்டும் ஒருவகைவழக்கம் இவருக்கிருந்ததென்று தெரிகின்றது.

திருவண்ணாமலைப் பரமேசுவரப்புலவர், உண்ணாமுலை எல்லப்பநயினார் முதலியோர்கள் இவர்காலத்திருந்த புலவர்கள்.

திருக்காளத்திநாதருலா, திருக்காளத்திநாதர் இட்டகாமியமாலை, சேயூர்முருகனுலா, திருவாட்போக்கிநாதருலா, திருவண்ணாமலையார்வண்ணம் ஆகிய இந்நூல்களும் சிலதனிப்பாடல்களும் இவரால்செய்யப்பெற்றனவென்று தெரிகின்றன.

திருக்காளத்திநாதருலாவில் ௭௮-ஆம் கண்ணிமுதலியவற்றிற் காலவிசேடப்பெயர்களும், அ௩-ஆம் கண்ணிமுதலியவற்றில பன்னிரண்டு இராசிப்பெயர்களும், ௯0-ஆம் கண்ணிமுதலியவற்றில் பந்தத்நூற் காரியப்பொருள்கள் பலவற்றின் பெயர்களும், ௨௭0-ஆம் கண்ணிமுதலியவற்றிற் பலவகையான நூற்றிலப்பெயர்களும் ௩௭௨-ஆம் கண்ணிமுதலியவற்றில் ஸ்தலப்

* இந்நூல் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

பெயர்களும் தொனிக்கும்படி இவர்பாடியிருத்தலையும், பின்னும் ஆங்காங்கு அமைத்துள்ள செம்பாகமான பலவகை அடிமடக்குகள், சிலேடைகள் முதலிய வற்றையும், சிவோத்கருஷங்களையும் உற்றுநோக்குகையில், இவருடைய செய்யுள்நடை திருவானைக்காவுலாவுடையவராகிய காளமேகப்புலவருடைய அதி விசித்திரகரமான செய்யுள்நடைபோல மதிக்கப்படுகின்றது.

இவ்வரலாறு, கர்ணபரம்பரைச்செய்தியாலும் சில பழையசெய்யுட்களாலும்தெரிந்து எழுதப்பெற்றது. அச்செய்யுட்கள் வருமாறு:—

சேயூர் முருகன்பிள்ளைத்தமிழ், அம்புலிப். கo.

க. தவிராத வெவ்வினை தவிர்க்குமுரு காறுந்
தரித்தா றெழுத்தோதலாஞ்
சந்நிதிக் கருணகிரி நாதன் றிருப்புகழ்ச்
சந்தம் புகழ்ந்துய்யலாம்
புவிராசன் வாவன் கழுக்குன்றன் வளமைபுரி
புண்ணியந் தரிசிக்கலாம்
பொருசூர னைப் பொருங் கதைமுதற் கந்தப்
புராணக் கடற்காணலாங்
கவிராச ளிப்பிரான் மிசைசெய்த திருவுலாக்
கலிவெள்ளை கற்றுருகலாங்
கவிவீர ராகவன் சொற்றபிள் ளைக்கவி
கலம்பகக் கவிவினவலா
மவிராட கக்கோயில் புக்குவிளை யாடலா
மம்புலீ யாடவாவே
யயிலவன் செய்கையின் மயிலவன் கந்தனுட
னம்புலீ யாடவாவே.

* சேயூர் முருகனுலா, கண்ணி, கருஉ - ரு.

உ. செவிரா சியங்கடந்த சேறைக் - கவிராசன்
சொன்ன வுலாப்படித்துச் சோதிபெறத் தாலாட்டிக்
கன்ன லறிந்தந்திக் காப்பேற்றி - யன்னநடை
காட்டியிட காட்டியுடை காட்டிவிழி காட்டிமொழி
காட்டியியல் காட்டிமயல் காட்டியே - நாட்டவரைப்
பூவரடி யாராக்கிப் புன்முறுவ லாலுருக்குந்
தேவ ரடியார் திரஞ்சூழ.

ஷ உலாச்சிறப்புப்பாயிரம்: வெண்பா.

ங. கொற்றவரெண் செய்யூர்க் குமர.........
கற்றவரெல்லாங் களிக்கவே - வெற்றிக்
கருணேசன் சேறைக் கவிராச ராசன்
.......................சொன்ன வுலா.

---

* இவ்வுலாவைத் தந்துதவியவர், ம-ா-ா-ஸ்ரீ, க. குப்புசாமி முதலியார் அவர்கள், B.A.

## தமிழ்நாவலர் சரிதை.

ஆசுகவிராசசிங்கம், கடிகையாரைப்பாடியது: வெண்பா.

௪. செந்தமிழோர் தங்களிரு சீபாத தூளிபொர
வந்த புலவோர்த மார்பாணி - கந்த
னடிகையா ரப்பரவு மாசுகவி ராசன்
கடிகையார் சோலா கலன்.

பாண்டியராசா ஆரென்று கேட்டபோது இவர் பாடியது: விருத்தம்.

௫. தென்பா ரளு மறுவிற் குறுமுனி தேக்கிண கயிலையில்வாழ்
செந்தூர் தக்குல வேங்கட ராயன் றிருவா சற்புலவ
னென்பேர் வண்ணக் கட்சிய தன்றி மயதிர்த்தவர் மார்பாணி
யிந்தத் தேசப் புலவர்ம னத்துக் கிடியென வந்தேன்கா
ணுன்பால யான்வர வாசற் காராக் குத்தா ரம்பண்ணி
யுள்ளுக் கென்னை யழைப்பித் தாசி னுரைக்குங் கவிதைகள்கேட்
டென்பால் வரிசைகள் பரிசில்க ணல்கி யிரட்சித் திடவேணு
மிராமா சீவிலி மாறு பாண்டிய ராச வரோதயனே.

திருவண்ணாமலையிற் பரமேசுவரப்புலவர் பாடியது:
சட்டளைக்கலித்துறை.

௬. கண்ணார் மதிக்குங் கவிராச சிங்கங் கடந்துதிரு
வண்ணா மலையப்பர் மேல்வண்ணம் பாடிமுத் தாலத்திகொண்
டெண்ணா யிரமட வார்சூழப் பல்லக்கி லேறிவந்தா
னுண்ணா முலையெல்லன் மூலைக டோறு மொதுங்கினனே.

பழையதனிப்பாடல்: வெண்பா.

௭. ஆறு முக னாணை யவனடியார் தம்மாணை
ஏறு மயிலாணை யென்னாணை - வீறுபுகழ்
தேறு கவிராச ராசன் றிருவாணை
ஏறிய வாறே யிறங்கு.

இந்தவெண்பா, நல்லபாம்புதீண்டப்பெற்று ஒருவர் மயங்கியபோது விஷவேகத்தை இறக்குதற்கு இவருடைய மாணாக்கரொருவர் சொன்னதென்பது கர்ணபரம்பரைச்செய்தி.

[குறிப்பு :—(௧) முருகாறு-திருமுருகாற்றுப்படை. வளவன் கழுக்குன்றன் - சேயூர்க்கோயிலிற் றிருப்பணிசெய்த ஒருபிரபு. திருவுலா - சேயூர் முருகனுலா. பிள்ளைக்கவி - சேயூர்முருகன் பிள்ளைத்தமிழ். கலம்பகம் - சேயூர் முருகன் கலம்பகம். செய்கை - செய்யூரென்பதன்மரூஉ; சேயூர்க்குச் செய்யூரென்றும் பெயருண்டு. (௨) ராசியம்-இரகசியம். உலா-சேயூர்முருகனுலா. கன்னல்-நாழிகை. (௩) கருணேசன் - கருணீகச்சாதியாருடையதலைவர். (௪) கடிகையார் - கடிகைப்புலவர். (௫) தக்கிணகயிலை-திருக்காளத்தி. வண்ணக்கட்சி-வண்ணக்களஞ்சியம்; கட்சி - கூடு. உத்தாரம் - கட்டளை ; உலக வழக்கு. ஆசில் - விரைவில். (௬) கண்ணார் - பகைவர். கடந்து - பகைவரை வென்று. உண்ணாமுலையெல்லன் - உண்ணாமுலையெல்லப்பநயினாரென்னும் புலவர்.

# திருக்காளத்திநாதருலா ஆராய்ச்சி.



இத்தலத்திற்குரிய விசேடங்களைப் பலவகையாக இந்நூலுள் ஆசிரியர் அமைத்திருத்தல் மிகவும் இன்புறற்பாலது; ஒவ்வொன்றற்கும் பின்னுள்ள எண்களாற் சுட்டப்படும் கண்ணிகளைப் படித்தலால் விளங்கும்.

இத்தலமுள்ள நாடு ஆற்றூர் வளநாடு. கண்ணி-சாஉ, ருஙஎ.

**ஸ்தலவிநாயகர்:**—அஞ்சத்திவிநாயகர்; இப்பெயர் ஐஞ்சத்தியென்றதன் மரூஉ; காப்பு, ருஙகூ.

**ஸ்வாமியின் திருநாமங்கள்:**—ஸ்ரீகாளத்திநாதர்.—சிலந்தி காளமென்னும் பாம்பு, யானையென்னும் இம்மூன்றாலும் வழிபடப்பெற்றவரென்பது இதன் பொருள்; திருக்காளத்திநாதர், எஎ, ருஙஎ; அழைத்து வாழ்வித்தவர், எசா, உசக; ஆயிரநாமத்தவர், ஙரு, உ௦சா; ஆராவமுதர், எசா, உஅங, உகூரு, ருருஅ; ஆல், ருருஎ; ஐந்துகொழுந்து, ங௦எ; கணநாதர், உஎரு; கரும்பு, உஅச; கல்லாலடிக்கரும்பு; உஉக, உஎகூ, ங௦எ; கல்லாலடியார் (கல்லாலடி), ருஅ, கூ௦, கக௦, ங௦ங, ச௦௦, சஉகூ, சச௦, சஅஎ, ருஉச, ருஎச; கல்லாலின் கனி, உஙஅ; காபாலி, ருஅ, ஙஙக; காளத்தி, சசா; காளத்தியானை, கசசா, சருஎ, ருருரு; சார்ந்தாரைக்காத்தவர், எச, உ௦ங, உஙகூ, ரு௦சா, ருருகூ; சேர்ந்தார்க்கினியோர், உ௦ங; சோதிப்பெருந்தேவர், உ௦ரு; சோதிவிடங்கர், எச, உ௦ரு, ஙஎ௦, ருஎஎ; தருமமூலரத்தவர், ரு௦சா; தென்கைலைநாயகர், ககரு, ருஙசா; பச்சிமவாயிற்பரமர், சாரு, எசா, சகூக; புலி, அரு, உ௦சா, சசா௦; மலைக்கொழுந்து, உ௦எ, ஙககூ, ருருங: செவ்வந்திப்புராணம், திருமலைச்சருக்கம், சஅ, சகூ-ஆம் பாடல்களைப்பார்க்க; மாணிக்கச்சோதிமலை, உ௦க; மும்முடிச்சோழபுரமூர்த்தி, சாச; மெய்த்தேவர், எச; யானைத்துணை, உ௦ச; வரந்தருவார், சகக, ருசக. **ஸோமாஸ்கந்தமூர்த்தி திருநாமம்:**—சோதிவிடங்கர்.

**அம்பிகையின் திருநாமங்கள்:**—ஞானப்பூங்கோதை; இப்பெயர் ஞானப்பூவெனவும், ஞானமெனவும் வழங்கும், எங, ககக, உஙஎ, ருசாசா; வண்டார்குழலாள், ருகூ, ருசாஎ.

**பீடங்கள்: திருக்காளத்திநாதரது பீடம்.**—ஆகமபீடம். **தக்ஷிணாமூர்த்தியின்பீடம்:**—வைதிகபீடமெனவும், தென்பீடமெனவும் வழங்கும், கஙரு.

**ஸ்தலத்தின் திருநாமங்கள்:**—கண்ணப்பபுரம், சாரு; கயிலை, உரு௦, ஙககூ, சஅ௦; திருக்காளத்தி, சசா; தென்கயிலை=தக்ஷிணகைலாஸம், கூ, ககரு, உகூரு; மும்முடிச்சோழபுரம், சாச.

**தீர்த்தங்கள்:**—பொன்முகரியாறு, கரு-உங, கஙச, கசக, உருஅ, ங௦அ, சகூஉ, ருஙசா, ருசாங; அரசதீர்த்தம், ஙரு; உருத்திரதீர்த்தம், ஙஎ; மகாகாளி தீர்த்தம், ஙசா; மகாமோகினிதீர்த்தம், ஙசா; மணிகங்கை அல்லது மணிகர்ணிகை, ஙஅ; மாயூரச்சுனை, ஙசா; மார்க்கண்டதீர்த்தம், ஙசா, வசசிரதீர்த்தம், ஙச.

**விருக்ஷம்:**—அகண்டவில்வம், க௦க; கல்லால்: இது சிலைவடம், கனகக்கல்லாலெனவும் வழங்கும்; ருஅ, கக௦, உஉக, உஙஅ, உஎகூ, ங௦ங, ங௦எ, ச௦௦, சஉகூ, சச௦, சஅஎ, ருகக, ருசக, ருருஎ, ருஎச.

**மலைகள்:**—அகத்தியமலை, கங; துர்க்கைமலை, ஙச; தென்கைலைமலை, கூ, ககரு, ககூ, கசசா, ருஙசா; நீலமலை, ஙஎ.

**வழிபட்டுப்பேறுபெற்றோர்:**—அக்கினிப்பிரபன், உஎ; அரிச்சந்திரன், சருங; அருச்சுனன், சருங; ஆதிசேடன், உஙச, ருஎசா; இந்திரன், உசா;

**கண்ணப்பர்**, ௪௭-௫௨, ௧௨௦, ௧௪௦, ௧௮௬, ௨௦௪, ௨௨௩, ௨௨௬, ௨௪௭, ௨௫௪, ௨௬௩, ௩௫௦, ௩௯௫, ௪௦௮, ௪௮௪, ௫௨௬, ௫௬௫, ௫௭௬; **கன்னியரிருவர்**, ௫௬, ௧௨௧, ௧௮௮, ௩௬௯, ௫௨௧, ௫௭௬; காளனென்னும்பாம்பு, ௪௧-௬, ௧௨௧, ௧௪௯, ௧௮௫, ௨௩௬, ௨௪௫, ௨௯௨, ௩௯௩, ௩௯௬, ௪௮௦, ௪௮௭, ௫௨௪; கௌசிகர், ௨௮; சனகாதிகள், ௨௮, ௧௧௧; சித்திரசேனன், ௨௯, ௫௭௫; சிலந்தி = சிலம்பி, ௩௯-௪௦, ௧௩௧, ௧௮௫, ௩௦௯, ௩௯௭, ௪௮௩, ௫௨௬, ௫௭௬; சிலந்தி முதலிய எண்மர், ௩௦௯; சிவகோசரியார் = சிவகோசன், ௪௯, ௫௨, ௧௮௭, ௨௦௩, ௨௪௯, ௫௭௫; சுந்தரபாண்டியன், ௬௫; சோழர்மூவர், ௬௩, ௧௯௦: திருமால், ௧௧, ௧௨௨, ௫௩௭; துர்க்கை, ௩௪; நக்கீரர், ௫௪, ௧௮௭, ௨௪௮, ௪௮௯, ௫௨௩, ௫௬௪, ௫௭௬; நீலை, ௨௬; பகீரதன், ௪௫௩; பிரமன், ௧௭-௨௩, ௪௯௦, ௫௩௭; மகாகாளி, ௩௬; மணிமான், ௨௯, ௫௭௫; முசுகுந்தன், ௨௬; மூகனொருவன், ௫௪௬; யாதவன், ௬௬-௭௨, ௧௯௧; யானை, ௪௧-௬, ௧௨௧, ௧௪௦, ௧௮௬, ௨௩௬, ௨௪௬, ௩௯௪, ௫௧௯, ௫௨௨, ௫௭௫; வசிட்டர், ௨௮; ஸரஸ்வதீ, ௨௪, ௩௬௮, ௫௩௬, ௫௬௪.

**மடங்கள்:**—பதினெண்மடம், ௧௯௪; பரத்துவாசாச்சிரமம், ௩௭; மணிகங்கை மடம், ௧௯௩; வடமடம், ௧௯௩.

**திருத்தொண்டு பூண்டொழுகியவர்கள்:**—ஆறுகொத்தார், ௧௯௪; எட்டுக்கொத்து இளையநாயக்கர்கள், ௧௯௭; கோயிற் கணக்கர், ௧௯௬; சிட்டயராமன், ௧௯௨; பத்துக்குடி வேதபாரகர், ௧௯௫; மந்திரவோலைக்கணக்கர், ௧௯௬.

**விசேடச் செயல்கள்:**—தென்கைலையை வலம்வருதல், ௩௮, ௫௨௬; மேற்குச் சாளரவாயிலின் வழியே திருக்காளத்திநாதரைத் தரிசித்தல், ௫௨௪.

இத்தலத்திற்குரிய ஆகமமும் தேவாரமுதலியனவும் வருமாறு:—

**ஆகமம்:**—காரணம், ௧௩௬, ௧௯௫.

**தேவாரம்: திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்:**—சந்தமாரகிலொடு - கொல்லி; வானவர்கடானவர்கள் - சாதாரி. **திருநாவுக்கரசு நாயனார்:**—விற்றூணொன்றில்லாத - திருத்தாண்டகம். **சுந்தரமூர்த்தி நாயனார்:**—செண்டாடும் விடையாய் - நட்டராகம்.

**௧௧-ஆம் திருமுறை: நக்கீரதேவநாயனார்:**—கயிலைபாதி காளத்திபாதித் திருவந்தாதி, போற்றிக்கலிவெண்பா, கண்ணப்பதேவர் திருமறம். **கல்லாடதேவநாயனார்:**—கண்ணப்பதேவர் திருமறம்.

## புராணங்கள்.

**வடமொழி:**—தக்ஷிணகைலாஸ மகாத்மிய முதலாகிய புராணங்கள்-௭.

**தெலுங்கு:**—தூர்ஜடிகவி இயற்றிய புராணம்-௧, [இதன் மொழிபெயர்ப்பே தமிழ்ச் சீகாளத்திப்புராணம்.]

**தமிழ்:**—திருக்காளத்திப்புராணம் - ௧; சீகாளத்திப்புராணம் - ௧.

**தமிழ்ப் பிரபந்தங்கள்:**—திருக்காளத்திநாதர் இட்டகாமியமாலை, செய்யுள் - ௧௦௦; திருக்காளத்திக்கோவை; திருக்காளத்திநாதர் கட்டளைக்கலிப்பா - செய்யுள், ௨௦; திருக்காளத்திநாதர் பதிகம்-௧; வடமொழியில் இத்தலத்திற்கே யுரிய ஸஹஸ்ரநாமமும் பலவகைத் துதிகளும், தமிழிற் பல தனிப்பாடல்களும் உள்ளன.

**திருக்காளத்திநாதர் துணை.**

கணபதிதுணை.

# திருக்காளத்திநாதருலா.

## காப்பு.

நேரிசைவெண்பா.

### ஐஞ்சந்திவிநாயகர்.

காருலா வுஞ்சோலைக் காளத்தி யாள்வார்க்குச்
சீருலா விண்ணப்பஞ் செய்யவே - பாரில்
விளங்கருளஞ் [1]சந்தியான் வேழமுக [2]மானன்
களங்கருளஞ் சந்தியான் காப்பு.

## நூல்.

க. சீர்பூண்ட ஞானச் [3]சிறப்பிற் பராபரமா
யார்பூண்ட கொள்கைக்கு மாதியா - யேர்பூண்ட

உ. மூலமாய் மூலத்தின் [4]முப்பொருளா யப்பாலைக்
கோலமாய்க் கோலக் [5]குணக்குன்றாய்க் - [6]காலமாய்ச்

ந. சண்டமா யங்[7]கடந்து தன்வேலை [8]யைந்தியற்றிப்
பிண்டமா [9]யாட்டுவிக்கும் பேராள - னண்டங்க

## தலவிசேடம்.

ச. ளாணியா கச்சமைத்த வன்றே தனக்கமைத்த
காணியா குந்தென் கயிலாயன் - பேணி

ரு. வடகயிலா யத்தொருநாள் வானோ ரயன்மா
[10]லடகயிலா யத்தோ ரவைக்கே - புடையிருந்த

சா. மாதேவி நின்றுதனை வாழ்த்தியே நின்பதிக
ளேதேது பாரி லெனக்கேட்க - மேதினிமே

---

(காப்பு.)—விளங்கு அருள் அஞ்சந்தியான். களங்கர் உளம் சந்தியான்.
ந. சண்டம் - கொடுமை. வேலை யைந்து - பஞ்சகிருத்தியம்.
ரு. அடகு அயில் ஆயத்தோர் - இலைகளை உண்ணுகின்ற கூட்டத்தாராகிய முனிவர்.

(பிரதிபேதம்.) 1 'சந்தியார்' 2 'ஆனர்' 3 'சிறப்பின்' 4 'முற்பொருள்' 5 'குலக்குன்றாய்' 6 'சீலமாய்ச்' 7 'கடந்துதான்புரியுமவ்வேலை' 8'ஐந்தியற்றப்' 'ஆக்குவிக்கும்' 10 'அடகயில்வார்போற்றும்'

எ. லாயிரத்தெட் டெண்டுபெதி யாய்ந்தாய்ந் தவற்றெடுத்த
நாயகமா கும்பதிக ணைகவற்று - ணீயெம்மைக்

அ. கூடிவிளை யாடுவது [1] கோலவட காசியிலே
யாடல் புரிவதுபொன் னம்பலத்தே - நீடுமுது

௯. குன்றிற் குலாவல் குடும்பத் துடனிருக்கை
[2] தென்றிக் கயிலையிலே சேயிழையா - யென்றனுமே

௧௦. வேத வியாதன் விடைகொண்டு காசிபுகப்
போதன் முதிய பொருப்பேற - மாதவத்தோர்

௧௧. மன்றுதொழத் தன்னெதிரே மாலிரண்டு யோசனையி
னின்றுதொழுங் கல்லாலி னீழலான் - மன்றனுமை

௧௨. யம்மை மணத்தி லருள்கொண்டு [3]தெற்கில்வருஞ்
செம்மை முனியயனைச் சென்றேத்தி - யிம்மை

௧௩. [4] யகத்தியமாக் குன்றி லமைத்த நதியாய்ப்
பகுத்தபெருங் கங்கையிலோர் [5]பங்காய்த் - தொகுத்த

௧௪. மருவா ரிருகரையு மாகடலின் மட்டாய்த்
திருவார் சிவாலயங்கள் செய்தே - சுரர்முனிவர்

௧௫. சீலத் தவம்புரியச் செம்பொன் கொழித்துநடந்
தாலிக்கும் பொன்முகரி யாற்றினன் - பாலர்

௧௬. சதுரா னனற்குமொழித் தையலுக்கு [6]மூன்று
பதின யிரர்பிறந்தேழ் பாரு - மதிரப்

௧௭. பரதாரங் கொண்டரக்கர் பல்கோடி நல்கி
விரதா திகளழிக்க விண்ணோர் - கருதிவிதி

---

அ - ௯. முதுகுன்று - விருத்தாசலம். தென்றி - தெற்கு; "தென்றி யரக்கனைக், குன்றிற் சண்டைமன், அன்று நெரித்தவா, நின்று நினைமினே" தே.

௧௦. போதன் - பிரமன்.

௧௧. மன்று - சிதம்பரம். மால்இரண்டு யோசனையில் நின்றுதொழு மிடம் திருவேங்கடமலை; 'தொழுதெதிரே கோடேறி, நின்ற முராரி' என்பர் பின்னும்; ௧௨உ.

௧௨. முனி-அகத்தியர். ௧௩. பங்கு-கூறு. ௧௫. ஆலிக்கும்-முழங்கும்.

௧௬. மொழித்தையல் - கலைமகள். அதிர - நடுங்க.

௧௫ - ௬. பாலர் பிறந்து.

(பி - ம்.) 1 'கொற்றமணிக்காஞ்சியிலே' 2 'தென்றற்கயிலை' 3 'தெற்கு வருஞ்' 4 'அகத்திய மாங் குன்றி லழைத்த' 5 'பாங்காய்-மிகுத்த' 6 'மும் மைப் பதினயிரர்'

௧௮. யானேனைக் [1]கண்டுரைக்க வாங்கவனுந் [2]தன்னவரைத்
தானோர் மகவீன்று சாடென்னப் - போனேன்

௧௯. கடிந்தவரைக் [3]கொல்லத்தன் காளையர்க ளெல்லா
மடிந்த[4]பம்ம கத்தி வரலும் - படிந்தரனைப்

௨0. பூசித்தா லன்றியிது போகாதென் றஞ்செழுத்தும்
பேசித் தவஞ்செய் பிரமற்கா - மாசி

௨௧. வரமகத்திற் [5]றோன்றியே மற்றவனைச் சூழ்ந்த
பிரமகத்தி யைப்போக்கப் [6]பின்னுந் - திரமகத்திற்

௨௨. [7] பொன்முகரி யாடியவன் புத்திரன்வேண் டிப்போற்ற
நன்மகவை [8]யீந்தந்த நாளிலே - நின்முகரி

௨௩. யாடிவலஞ் செய்தோ ரனைவர்க்கு மைந்தர்களு
நாடியது நல்கென்ன [9]நல்கினோ - னீடுதவப்

௨௪. பாங்கலனோ டோவாது பாடி யவன்சபிக்க
மூங்கைவடி வாய்வெண் முளரியா - ளீங்கிறைஞ்சத்

௨௫. [10]தாக்குகொடுஞ் சாபந் தவிர்த்துச் சகலகலை
[11]வாக்குவி யாக வரந்தந்தோன் - கோக்குலிசத்

௨௬. திந்திரன்பூ சித்தருளு மெம்பிரா னீலையெனுந்
[12]தந்திரமா சத்திதொழுந் தம்பிரா - னந்தமுசு

௨௭. குந்தன் பணிவான் குளி[13]ரக் கினிப்பிரபன்
வந்தன் புடனே வழிபட்டோன் - [14]சந்தன்

---

௧௮. மகவு - உக்கிரன். ௧௯. பம்மகத்தி - பிரஹ்மகத்தி.

௨௧. மகம்-மகநக்ஷத்திரம்; இஃது இத்தலத்தில் மிக்க விசேடமுடையது.

௨௨. நன்மகவை - ரிபுவென்னும் முனிவரரை.

௧௯ - ௨௩. பிரமதேவர்க்குப் புத்திரர் முப்பதினாயிரவர் பிறந்தது முதலிய வற்றை, சீகாளத்தி. நான்முகச்சருக்கத்தாலுணர்க.

௨௨ - ௩. ஈந்து நல்கினோன்.

௨௪. பாங்கலன் - ஒருமுனிவர். வெண்முளரியாள் - கலைமகள்.

௨௬. நீலை - ஒருயோகினி மங்கை; "அமர, குலக மாந்தருள் யோகினி நீலையென்பவளும்", "கற்பக நறுநீழல், வள்ளலு நீலையெனும் யோகினி மடவாளும்" என்பவை திருக்காளத்திப்புராணம்.

௨௭. அக்கினிப்பிரபன் - ஓர்அசுரன்; "ஆத ரந்திக முக்கினிப் பிரபனு மசுரன்" என்பதனாலுணர்க; திருக்கா. சந்தன் - அகத்தியமுனிவர்.

(பி - ம்.) 1'கண்டுதொழ' 2'மற்றவரை' 3'கொல்லெனக்' 4'பிரமத்தி', 'பிர்ம்மகத்தி' 5 'தோன்றி மலரயனை' 6 'பின்னும்-பரமகத்து' 7'அவனைப்போற்ற முகரிபுவர' 8 'ஈயவந்தநாளிலே' 9 'நல்கினோன்-பாடவிகல்' 10'தாக்கியசாபம்' 11'வாக்குவியாகும்படிக்கு வாய்தந்தோன்' 12'சந்திரன்மா சத்தி' 13'அக்கினிப் பகவன்' 14'சந்த'

உஅ. வசிட்டன் கவுசிகன்முன் வாசவனை வைத
விசிட்டன் சனகாதி மேலோர் - கசட்டறிவு

உகூ. சென்றமணி மான்[1]வீணைச் சித்திரசே னன்பணிவான்
குன்றமணி மாசித்தி கூட்டுவோன் - கன்றையூ

௩0 ராரூரி லேபுவியா யானைக்கா விற்புனலாய்ச்
சீரூ ரருணையிலே செந்தீயாய்ப் - [2]பேருரு

௩க. மேகாம் பரத்தி லியங்கொலியாய்த் தன்னூரி
லாகாய மாய்நிற்கு மாடலான் - மாகாயம்

௩உ. பொன்னுக்குந் தன்னுற்றிற் பொன்றிற் [3]பரமுத்தி
யின்னூர்க்கென் னுமை லினிதளிப்போன் - முன்னுளிற்

௩௩. கல்லென்ற தாருகனைக் காளி தனைவகுத்துக்
கொல்லென்று விட்டான் குழையிட்டான் - வல்லியிடைத்

௩சு. துற்கை யிருந்து தொழுமலையா னிந்திரனூர்
செற்குலிசத் தாற்கண்ட தீர்த்தத்தா - னிற்கு

௩ரு. மரகர[4]தீர்த் தத்தி லமர்ந்தருள்வான் பேரா
யிர[5]முடையன் பொற்கோயி லீசன் - பரமளிக்கு

---

உஅ. வைதவிசிட்டன் - கௌதமர்; விசிட்டன் - விசேடமுடையவர்.

உகூ. சென்ற - நீங்கிய. மணிமான் - ஓர் இயக்கன்; சித்திரசேனன்-ஒரு கந்தருவன்; "திகழ்மணிமான் முன்னியக்கர்", "இனிய சித்திர சேனன் முன்னுனயா மிசையிற், பனிவிசும்பிடைக் கந்தரு வரும்பணிந் தனரால்" என்பவற்றுலுணர்க; திருக்கா. குன்றம் அம்மணி மாசித்தி கூட்டுவோன்; தென்கயிலைக்குத்தெற்கே வித்தாசலமென்ற மலையொன்று உள்ளது; "அட்ட மா சித்திகளணைதரு காளத்தி" என்பது, திருஞா. தே. கொல்லி. கக.

௩க. ஒலி - காற்று.

௩௩. "வல்லைவரு காளியை வகுத்துவலி யாகிமிகு தார கனைநீ, கொல்லெனவிடுத்தருள் புரிந்தசிவன் மேவுமலை...............காளத்திமலையே" என்பது, திருஞா. தே. திருவிராகம், ௩.

௩சு. மலை - கனகதுர்க்காம்பாமலை; இது தென்கைலைக்கு வடக்குள்ளது. செல் - இடி. தீர்த்தம் - வச்சிரதீர்த்தம்.

௩ரு. அரகரதீர்த்தம் - ஹரஹரவென்பவன் உண்டாக்கியதீர்த்தம்; சிவத்திரவியங்களை அபகரித்த கொடும்பாவத்தால் நரகத்திற்கிடந்து துன்புற்ற கரபனென்னும் ஆதிசைவனொருவன் தன்னைக்கண்டு சகியாமல் சாநந்தரென்னு முனிவர் ஹரஹரவென்று கூறியதைக்கேட்டு அப்பாவம் ஒழியப்பெற்று ஹரஹர னென்று பெயருள்ள ஓர் ஆதிசைவனுகப்பிறந்து இத்தலத்தையடைந்து வழி

(பி - ம்.) [1]'பெரியசித்திரசேனன்' [2]'பேருராம்' [3]'கபாலமுத்தி' [4]'தீர்த்தத் தமர்ந்தருள்வான்' [5] 'உடையபொற்'

௩௬. மார்க்கண்டன் மாகாளி மாமோ கினித்தடத்தான்
சேர்க்கு [1]மயூரத் திருச்சுனையா - ணுர்க்கு

௩௭. முருத்திரதீர்த் தத்தா னுயர்நீல வெற்பான்
பரத்துவச ஞச்சிரமப் பாங்கான் - [2]கருத்தொலைக்கு

௩௮. மென்மணி[3]கங் கைத்தடத்தா னீங்கிவையெல் லாஞ்சூழ்ந்த
தன்மலையைத் தான்சூழுந் தன்மையான் - கன்மமற

௩௯. நெஞ்சிலந்தி லண்ணனே நித்தா வெனப்போற்றிச்
செஞ்சிலந்தி நூலினுற் செய்கோயில் - பஞ்சிலங்கு

---

பட்டு அவன் உண்டாக்கியது. அங்கே சென்றோர், ஹரஹரவென்றால் தாரை யாகத் தீர்த்தம் மேலேயிருந்துவிழுமென்றும் சொல்வதுண்டு; "உரைதரு மதன் வடபா லோங்கரு வித்தாரை, யாகரவெனின்வீழு மாகரதீர்த்தமெனுச், சுரர் முனி வரர்சொற்றுர்" என்பதனுலுணர்க; திருக்கா. பேராயிரமுடையன் - ஆயிரம்திருநாமங்களையுடையவர்; திருக்காளத்திநாதருக்குத் தனியே ஒருஸஹஸ் ரநாமமுள்ளது; அன்றி, மூலத்தானத்துக்குத்தெற்கே ரு-நாழிகை வழித்தூரத் திலுள்ள தருமக்ஷேத்திரத்தில் எழுந்தருளிய ஸஹஸ்ரலிங்கேசுவரரென்னும் சிவலிங்கப்பெருமானை இம்மொழி கூறியதாகவும் ஊகித்தற்கிடமுண்டு.

௩௬. மயூரத்திருச்சுனை - மயூரன்பொருட்டு உண்டாக்கியசுனை; கேரள தேயத்திற் பிறந்தவனும் பொருளைவிரும்பித் தந்தையைக்கொன்ற மகாபாவி யுமான மயூரனென்பவன் அப்பாவத்தால் வருந்தி இத்தலத்தையடைந்தபொ ழுது சிவபெருமான் கருணைகூர்ந்து விருத்தப்பிராமணவடிவங்கொண்டு தோன்றி அவன்பாவத்தை ஒழித்தற்பொருட்டுத் தமது தண்டத்தால் மலையைக்குத்தி உண்டாக்கப்பெற்றது.

௩௭. உருத்திரதீர்த்தம் - திருக்காளத்தீசர் சந்நிதியிலுள்ளது. நீலவெ ற்பு - நீலமலை; இது மூலத்தானத்திற்குத் தெற்கேயுள்ளது; வைரவக்கடவுளெ ழுந்தருளியிருத்தலின், வைரவமலையென்றும் வழங்கும். பரத்துவச ஞச்சிர மம் - பரத்துவாசமுனிவர் தவஞ்செய்த ஆச்சிரமம். இது மூலத்தானத்திற்கு அக்கினி மூலையில் மலையின்மேலுள்ளது. இதற்கு அருகே அம்முனிவரால் உண்டாக்கப்பெற்ற பரத்துவாசதீர்த்தமும் அதன் அக்கினிமூலையில அவர் பூசித்த பரத்துவாசலிங்கமுமிருக்கின்றன.

௩௮. எல - ஒளி. மணிகங்கைத்தடம் - மணிகர்ணிகாதீர்த்தம். இது மூலத்தானத்திற்குத்தெற்கே ஓர் அம்புவீழெல்லையிலுள்ளது. மாசிமாதத் தில் நடக்கும் பிரஹ்மோத்ஸவத்தில், ௩-ஆம் திருநாளிலும் மகர சங்கிராந்தியி லும் திருக்காளத்திநாதர் வேட்டைக்கோலத்தோடு தென்கயிலைமலையைச்சூழ எழுந்தருளிவருதல் இயல்பு. இது மிருகயாவிநோதமென வழங்கும்.

௩௯. நெஞ்சில் அந்தி வண்ணனே.

(பி - ம்.) 1 'மாயூரத் திருச்சுனை' 2 'திருத்துமுதல்' 3 'கங்கைத்தலத் தான்'

௪௦. தீபம் படவதுதன் சீவன் [1]விடத்தோன்றி
நீபங் கயத்தாளி னில்லென்றோன் - கோபக்

௪௧. கடுவரிக்கா ளன்மணியைக் கல்லென்று தள்ளித்
தடமதக்கைக் நீராட்டித் தந்தி - யிடுமலரைச்

௪௨. செற்றையெனப் பாம்பிகழச் செய்நாளின் மற்றிரண்டு
மொற்றை யொருநா ளுவாவர லும் - புற்றரவ

௪௩. மூக்கிற் புகுந்து முடிகுடைய வெய்யவிடந்
தாக்கித் தலைமண்டை [2]தான்கொண்டு - மாக்கிரியை

௪௪. முட்டிநா கப்பெட்டி முத்துமா ணிக்கத்தின்
பெட்டிபோற் கும்பம் பிளந்திரண்டும் - [3]பட்டளவிற்

௪௫. கைந்நாகம் பைந்நாக கங்கணம்பூ ணப்[4]பொருமப்
பைந்நாகங் கைந்நாகப் பட்[5]டுடுக்க - [6]முன்றுகித்

௪௬. தாளிற் கலந்தவற்றூற் [7]றன்பேருங் கொண்டருங்
காளத்தி யூராகக் கற்பித்தோ - னீளத்

௪௭. திருவார் சடையிற் செருப்பு[8]க்கா னீட்டி
யருவாது வாய்[9]நீர்கொண் டாட்டி - மருவாரும்

௪௮. பச்சிலையைச் சூட்டிப் பசித்ததெனச் சீராட்டி
யெச்சி லிறைச்சி யினிதூட்டி - வைச்சிருந்த

௪௯. [10]சீரன்ப னன்பைச் சிவகோச னேமறைந்து
[11]பாரென் றிருத்தியொரு பார்வைக்கே - சோரிவிடச்

---

௪௦. அது சிலந்தி.

௪௧. கடுவையும் வரியையுமுடைய காளனென்னும் பாம்பு.

௪௨. செற்றை - செத்தை. இரண்டும் செய்நாளில். உவா - யானை.

௪௪. யானையின்மத்தகம் உடைந்தபொழுது முத்தும் பாம்பின்தலையிலிருந்த மாணிக்கமும் வெளிப்பட்டன. கும்பம் - யானையின் மத்தகம்.

௪௫. கைந்நாகம் - யானை. பைந்நாகம் - பாம்பு. இந்த இரண்டும் சிவசாரூபம் உற்றன.

௪௬. அவற்றூற் கொண்டருளிய திருநாமம் காளத்திநாதரென்பது.

௩௮ - ௪௬. சிலந்தி, காளன், யானை இவைகள் சிவபெருமானை வழிபட்டு முத்திபெற்ற கதைகளைச் சீகாளத்தி. சீகாளத்திச் சருக்கத்தாலுணர்க.

௪௯. அன்பன் - கண்ணப்பநாயனூர். பார்வைக்கு-பார்வையினிடத்தே.

(பி - ம்.) 1‘பட’ 2‘தான்கொள்ள’ 3‘பட்டதற்பின்’ 4 ‘பொருதும்’, பொருந்தப்’ 5‘உடுக்கச்-செய்நாளில்’ 6‘முன்னுளில’ 7‘தன்னைப்பே ரிட்டருங்’ 8 ‘காநீட்டி’ 9‘நீரிறுட்டி’ 10‘சீரனவனன்பை’ 11‘பாரென்றிருக்க’

ருo. சென்றடியான் கண்டு தியங்கி மயங்கிமருந்
தொன்றிலுமா ருமெ லுபாயம்போய் - [1] நின்றிடந்து
ருக. தூயவிழி [2]யப்பியிடச் சோரிபோய் [3]மற்றைவிழி
பாய வவனுங்கண் பாய்ச்சாமுன் - வாய்திறந்து
ருஉ. கண்ணப்பா வென்றுருகிக் கண்டமறை யோனுடனே
வண்ணப்பா தங்கொடுத்து வாழ்வித்தோ - [4]னண்ணிக்
ருங. கயிலை மலைபாதி காளத்தி பாதி
பயிலுமறை நூறெறிந்து பாடிச் - [5] சயிலமிசை
ருச. யந்தாதி [6] கீர னருளத் திருமேனி
யிந்தாதி யாக மெனத்தந்தோ - னந்தாத
ருரு. [7] பாண்டிவள நாட்டிலுயர் பாவலனைப் போலவே
யீண்டி யிருங்கதியை யெய்தவே - வேண்டி
ருசா. வரும்புண்ட ரீகவிழி [8] மாறனைத் தாளி
லிரும்புண்ட நீராக்கு மெங்கோன் - சுரும்புண்ட
ருஎ. பொன்னின் சரணப் புகலியார் வேந்தனுக்குச்
சின்னங் கொடுத்த சிவபிரான் - [9] வன்னமறைத்

---

ருo. இடந்து - பெயர்த்து. ருஉ. மறையோன் - சிவகோசரியார்.

சஎ - ருஉ. "வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன்மல ராகுநயனங், காய்கணையி னாலிடந் தீசனடி கூடுகா ளத்தி மலையே" என்பது திருஞா. தே. திருவிரா. ச. கண்ணப்பநாயனார் சரிதத்தைப் பெரியபு. கண்ணப்பநாயனார் புராணத்தாலும், சீகாளத்தி. கண்ணப்பச் சருக்கத்தாலுமுணர்க.

ருங - ச. அந்தாதி-கயிலைபாதி காளத்திபாதித் திருவந்தாதி. கீரன்-நக்கீரர். தியாகம் இந்தாவெனத் திருமேனி தந்தோன்; "இந்தாவெந்தோ ரிளங்குழவி" கந்த. வள்ளி. ருரு. நக்கீரர் சரிதத்தைச் சீகாளத்தி. நக்கீரச் சருக்கத்தாலுணர்க; "சங்கத்தோன் வேண்டச் சரீரத்தையேயுதவித், துங்கத் தியாகியெனத் தோன் றுமக்கு" என்பது, இரத்தினகிரியுலா.

ருரு. பாவலன் - நக்கீரர்.

ருசா. புண்டரீக விழிமாறனார் - மதுரையிலிருந்த மாணிக்கவல்லியென்னும் பரத்தையின் புதல்வியர்களும் முறையே அமிர்தலதை, காந்திமதியென்னும் பெயரையுடையவர்களுமாகிய இரண்டு கன்னியர்கள். இரும்பு - நெருப்பிற் பழுக்கக்காய்ச்சிய இரும்பு; "ஏதிலேன் மனத்துக் கோ ரிரும்புண்ட நீரை" தேவாரம். சுந்தர. பிரமபுரம். இவர்கள் முத்திபெற்ற சரிதையை, சீகாளத்தி. கன்னியர்கதைச் சருக்கத்தாலுணர்க.

ருஎ. புகலியார் வேந்தன் - திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

(பி - ம்.) 1 'நின்றளவில்' 2 'அப்பிவிட' 3 'மற்றைக்கண்' 4 'எண்ணிக்' 5 'சயிலமடை' 6 'கீரற் கருளாற் சரீரத்தை' 7 'பாண்டியனார் நாட்டிலுந்தன் பாரத்திருவடியை, ஈண்டித் திருவடியி லேறவே' 8'மாறனை யிவ்வாறு' 9'முன்னமறைத்'

௫அ. தேவார வாகீசர் செம்பொற்கல் லாலடியிற்
[1] காவாலி யென்ற கணநாத - நாவலான்

௫௯. கொண்டாட வண்டார் [2] குழலா ளுடன்புகுந்து
சென்டா டியவிடையான் சீருடையான் - பண்டைநாற்

௬0. பண்ணை [3] மறைத்தோதப் பாகவத னம்மானைக்
கண்ணை மறைத்தோதக் கண்ணீந்தோன் - விண்ணவரும்

௬௧. [4] பூசச்சூ ழூந்திருமேற் பூச்சிறன் [5] பூசலிடு
மோசைக் கலிங்க னுயிருண்டோன் - வாசவனூர்

௬௨. பொன்னுலகைப் பூஞ்சோலை பூவுலக மாக்கவே
மன்னிவள [6] ராற்றூர் வளநாடன் - முன்னே

௬௩. மதிவிக்ர மச்சோழன் வண்குலோத் துங்கன்
றுதிபெற்ற ராசேந்த்ர சோழன் - கதிபெற்ற

௬௪. செம்மையர்க ளாகத் திருப்பணிக ளாற்பணியு
மும்முடிச் சோழபுர மூர்த்தியான் - மெய்ம்மைக்

௬௫. கனசுந் தரமாறன் கண்டமணி வாய்தற்
புனிதன்கண் ணப்ப புரத்தா - னனகனணி

௬௬. யாதவற்குத் தால மிடுவாளைப் புல்கிநீ
போதியெனப் போதுபோய்ப் போந்தானை - யாதவனுஞ்

௬௭. சீரளகங் கொய்யத் திரும்பிவந்து நைவாளைத்
தாராளகங் கூடத் தடவியே - பேரவென

---

௫அ. "கல்லாலின் கீழிருந்த காபாலிகாண்" என்பது, திருநா. தே. திருத்தா. அ. கணநாதன் - செ. க, ௩, ௪; சுந். தே. க, ௩, க0. நாவலான் - சுந்தரமூர்த்திநாயனார்.

௫௯. 'சென்டாடிய விடையான்' என்பர் பின்னும்; ௩௫0. "சென்டாடும் விடையாய் சிவனேயென் செழுஞ்சுடரே,வண்டா ருங்குழலா ளுமை பாக மகிழ்ந்தவனே" என்பது, சுந். தே. ச.

௬0 அம்மானை போன்ற கண்; "புகழாத வைணவர்தம் விழிமறைத்துப் பின்பு புகழ்விழி தந்திடுமலை" என்பது, சுப்பிரமணியக்கடவுள் க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ், திருக்காளத்தி, சிறுபறை. க.

௬௫. வரகுணபாண்டியர் வழிபட்டனரென்று வடமொழிப்புராணம் தெரிவிக்கின்றது.

௬௬. யாதவன் - நாராயண நகரத்தரசன்.

௬௭. கூட - வளர. பேர - செல்லுக.

(பி - ம்.) [1] 'காபாலி யென்னும்' [2] 'குழலாருடன் புகழ்ந்த' [3] 'மறைத்தோதுகின்ற பாகவதத் தம்மானை' [4] 'பூசச்சுடுந்திரு' [5] 'பூசியிடும்' [6] 'ஆற்றுவள நாடன்'

௬௮. வந்தானைக் கூந்தல் வருவித்தா ராரென்னத்
தந்தாரைச் சொல்லவிறை தாள்போற்றி - யெந்தாய்

௬௯. தலமே தெனக்[1]கயிலைச் சங்கமனு முன்னை
நலமேவப் பண்ண [2]நடந்தே - முலகி

௭௦. [3] லிரும்பெல்லாங் கூட்டென் றிரதவா தஞ்செய்
தரும்பொ னளகேச னுக்கித் - திரும்பவுந்தன்

௭௧. கோபுரங்கண் மண்டபங்கள் [4]கோயில் வலமேறு
மாபுரங்கொள் வீதி மணித்தேர்கள் - சோபனங்க

௭௨. ளாகத் திருப்பணிகொண் டந்தத்தி லேயவனை
யோகக் கதவுதிறந் துட்கொண்டோன் - [5]பாகத்து

௭௩. நாலெட் டறம்வளர்க்கு ஞானப்பூங் கோதையிடு
மாலைக்கு வாய்த்த மணவாளன் - சூலத்தன்

௭௪. மெய்த்தேவன் சோதி விடங்க னிருநான்கு
கைத்தேவன் சார்ந்தாரைக் காத்தபிரான் - மொய்த்தேறு

௭௫. நாகநில யத்திமையோர் நாயகன் மாலிடப
வாகன தேவன் மகதேவன் - சேகரித்த

௭௬. பச்சிம வாயிற் பரமனு ராவமுதன்
மெச்சி யழைத்துவாழ் வித்தருள்வோ - [6]னச்சன்

௭௭. கயிலாய மேவினன் காளத்தி யாள்வா
னுயர்திருக்கா ளத்தி யுடையான் - பயனறிந்து

## பலவகைச் சொல்லணிகள்.

௭௮. [7] சொல்வார்க் கணுவன் றுடியன் [8]கலைகாட்டான்
மல்வாய்த்த பேய்க்கணத்தான் மாத்திரையா - னெல்லைக்

---

௭௧. சோபனம்=சோபானம் - படி.

௬௯ - ௭௨. இக்கண்ணிகளிலுள்ள கதையை, சீகாளத்தி. விடசங்கமச் சருக்கத்தாலும், சிலந்திமுதல முற்கதைச்சருக்கத்தாலுமுணர்க.

௭௩. ஞானப்பூங்கோதை: அம்பிகையின் திருநாமம்.

௭௫. நாகநிலயம் - விண்ணுலகம்.

௭௬. பச்சிமவாயில் - மேற்குவாயில். அச்சன் - அத்தன். [கிய ஆடை.

௭௭. திருக்கு ஆள் அத்தி உடை - திருக்கையுடைய யானையின் தோலா

௭௮. அணுவன் - அண்ணுவார். துடி - உடுக்கை. கலைகாட்டான் - நூல்களாற் காட்டப்படாதவர். பேய்க்கணம் - பேயின்கூட்டம். மாத்திரை - மிக்க அலைகளையுடைய கங்கை. எல்லை - சூரியனை.

(பி - ம்.) 1 'கயிலைச்சங்கரனும்' 2 'நடந்தேமென்-றுலகில்' 3 'இரும்பையெல்லாங்கூட்டி' 4 'கோயி லலையேறு மாபுரங்கள்' 5 'பாகத்தில்' 6 'சச்சன்' 7 'சொல்வார்க் கிலவன்' 8 'கலைக்காட்டன்'

எகூ. கடிகையா னண்பகலான் காலையுச்சி வைத்தா
[1] னடியிரவன் செவ்வந்தி [2] நாத - னெடிய

அO. வுருத்திதியன் வார [3] னொருவனன்பு காணத்
திருத்திய னக்கத் திரத்தன் - [4] மருத்தடைத்து

அக. வைத்தமக [5] யோகன் கரணன் மறமிகுத்துப்
[6] பத்திபுரி யோரையுள்ளான் பஞ்சாங்கன் - சத்தியென்னு

அஉ. மாத னுவாவருடன் [7]வாலுகத்தன் கற்பத்தன்
தாதுண் சடைச்சுரும்பர்ச் சங்காரன் - [8]போதுநீர்

அங. வைகைக் கெதிரே வருமேடன் [9]சைவத்தார்க்
குய்கை மறையோ ருபநிடவன் - செய்கை

---

எகூ. கடி கையான் - கடிந்த கையைபுடையவர். நண்பு அகலப்பெறுத கண்ணப்பநாயனருடைய காலேஉச்சியில் வைத்துக்கொண்டவர். நடி இரவன்- இரவில் நடிப்பவர். செவ்வந்திநாதரென்பது திருச்சிராப்பள்ளியிற் கோயில் கொண்டருளிய சிவபெருமானுடைய திருநாமம்.

எகூ-அO. நெடிய உருத் திதியன் வாரன்-நீண்ட வடிவத்தையும் காத்தற் றொழிலேயுமுடைய திருமாலிடத்தே அன்புள்ளவர்; 'முகுந்தப் பிரியர்' என்பது சிவபெருமானுடைய திருநாமங்களுளொன்று. ஒருவன் - கண்ணப்பர். திருத்தியன் - திருப்தியையடைந்தோர்; திருத்தியவரென்றுமாம். அக்கு அத்திரத்தான் - (நெற்றிக்)கண்ணுகிய அஸ்திரத்தையுடையவர். மருத்து - காற்று.

அக. மகயோகம் - சிவயோகம். கரணன் - காரணமாகவுள்ளவர். பத்தி புரியோரை உள்ளான் - பத்திசெய்யாதவர்களே நினையாதவர். பஞ்சாங்கம் - ஐந்து அங்கங்கள்; தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் என்னும் அருட்பாக்கள் ஐந்தையும் ஐந்தங்கமென்றல் மரபு; பரவிய அங்கமெனினும் பொருந்தும்.

அக - உ. சத்தியெனு மாதன் - உமையென்கிற மாதையுடையவர். உவாவருடன் - யானையால் திருமஞ்சனம் செய்யப்பெற்றவர். வாலுகம் - வெண் மணலாற்செய்த திருவுருவம்; என்றது ஸைகதலிங்கத்தை. கற்பம் - திருநீற்றுவகையுள் ஒன்று. சுரும்பர் சங்க ஆரன் - வண்டின் கூட்டத்தையுடைய ஆரத்தை அணிந்தவர்.

எஅ - அஉ. இக்கண்ணிகளில் முறையே அணு, துடி, கலே, காட்டை, கணம், மாத்திரை, எல்லே, கடிகை, நண்பகல், காலை, உச்சி, இரவு, அந்தி. திதி, வாரம், நக்ஷத்திரம், யோகம், கரணம், ஓரை, மாதம், உவா, வருடம், உகம், கற்பம், சங்காரமென்னும் காலவிசேடப்பெயர்களும் பஞ்சாங்கமென்னும் பெயரும் தொனித்தல் காண்க.

அங. வரும் ஏடு. உபநிடவன் - உபநிடதத்தையுடையவர்.

(பி - ம்.) [1]'நடையிரவன்' [2]'நாதன்-படியைக், கவரொண் படையெடுத்துக் காக்குந்திதியான், மவுனன் கயிலேவடி வாளன் - சுவையூ, னருத்தியிடுங் கண்ணப்ப னன்பறிய வேண்டித், திருத்தியன்' [3]'ஒருத்தனன்பு' [4]'கருத்தடைத்து' [5] 'யோககரணன்' [6] 'பத்திபுரிவோரை' [7] 'மாலுகத்தன்' [8] 'மோதுநீர்' [9] 'சைவத்தாலுய்கை'

அச. யிதமிதுநந் தொண்டற் கெனத்தூது சென்றோன்
கதிரொளிவீ சுங்கற் கடக - னுதயகலைச்

அரு. சிங்கப் புலியன் சிலர்க்கன் னியனானோன்
சொங்கொண்ட சங்கத் துலாத்தினு - னங்கை

அசு. விரிச்சிகத்தா ராதிப்பான் வீணைத் தனுசன்
கரத்திலிசை பாய்மகரக் காதான் - புரத்தகையன்

அஎ. விற்சாத கும்பன் விதிக்குமீ னங்கெடுத்தோ
னெற்சாம கீத விராசியான் - பொற்சாயற்

அஅ. கையே றியதலையான் கண்ணே றியநுதலான்
மெய்யே றியநாவான் மேற்காலான் - செய்யார்

அகூ. திருமுல்லை வாயான் சிறந்தகுட மூக்கான்
கருமங்கு மஞ்சைக் களத்தா - னருமந்த

அச. நந்தொண்டனுக்கு இஃது இதம்; தொண்டன் - சுந்தரமூர்த்தி நாயனார். கற்கடகன் - மாணிக்கங்கள்பதித்த அத்தகடகங்களையுடையவர்.

அச - ரு. உதயம் சிங்கம் கலை புலியன் - தாணிலுதித்த சிங்கத்தோலாகிய ஆடையையுடைய புலிபோல்வார்; "சிங்கத்துரிமூடுதிர்" தேவாரம். "தம்பத்துதித்த சிங்கந் தானுருமூட் சாத்தணிவார்" திருவிடைமருதூருலா, ருசுசு. சிவபெருமானைத் தெய்வவியாக்கிரமென்றல் மரபாதலின், 'புலியன்' என்றார். இங்ஙனம் கூறுதலை இந்நூலில் உ0சு, சகூ0-ஆம் கண்ணிகளிலும் காண்க. இனி, உதயகலை - உண்டாகிய ஆடையை, சிங்கு அப்புலியன் - குறைந்த அந்தப் புலியினின்றும் பெற்றவரெனினுமாம். அன்பில்லாத சிலர்க்கு அந்நியரானோர். சொம் - பொருள் ; என்றது சங்க மண்டபத்துக்கு எதிரே தூக்கிய பொற்கிழியை. சங்கத்து உலாத்தினன்; "சங்கத் துலாத்துஞ் சரணத்தான்" என்பது செய்யூருலா.

அசு. விரிச்சு (விரித்து) இகத்து ஆராதிப்பான்; இகம் - இம்மை. வீணையையுடைய தனுசன் - இராவணன். தகையன் - தடைசெய்தவன்.

அஎ. சாதகும்ப வில்லன் - பொன்னாலாகிய மேருவில்லார். விதிக்கும் ஈனம் கெடுத்தோன். இராசி - கூட்டம்.

அரு - எ. இக்கண்ணிகளில் முறையே மேடமுதலிய இராசிகள் பன்னிரண்டின் பெயரும் அமைந்துள்ளன.

அஎ - அ. பொற்சாயற் கையென்றது வரகுணபாண்டியரின் தேவியாருடையகையினை; சிவபெருமான் திருமுடிமீது அப்பெண்மணியாருடைய திருக்கையேறிய சரிதத்தை, மருதவனப்புராணம், வரகுணச்சருக்கம், அரு-ஆம் செய்யுள் முதலியவற்றாலுணர்க; கையிலேறிய தலையென்றுவிரித்து, தலை பிரமகபாலமெனினுமாம். மேற்காலானென்றது ஊர்த்துவ தாண்டவமூர்த்தியை.

அகூ. திருமுல்லைவாய் - திருமுல்லைவாயில். குடமூக்கு-கும்பகோணம். அஞ்சைக்களம்-திருவஞ்சைக்களம்; மஞ்சு ஐ களம்-மேகம்போன்ற அழகிய கண்டமென்றுமாம். இக்கண்ணியில் தலப்பெயர்களை அவயவப் பெயர்கள் போலத் தோற்றும்படி அமைத்திருக்கும் அழகு வியக்கற்பாலது.

கூ0. பச்சை வடத்தான் பலகலைமேற் கட்டியா
னச்சிறுபா கைக்குள்ளே யாட்கொண்டோ - னச்சரவப்

கூக. [1] பேரணையான் பாகன் பெருங்காழிச் சட்டையான்
பாரியகச் சூரான் பவந்தடுப்பான் - [2]கீரநறுந்

கூஉ. துப்பட்டி யாட்டினான் துண்டப்புள் பூசித்தான்
முப்பத் திரண்டறமு முட்டாதா - னெப்பொழுதுங்

கூரு. கோவணத்தான் போர்வையான் கோயிலிலே தேவரெலா
[3] மேவி விளைத்தபரி வேட்டியா - னேவருக்கு

கூச. மந்திரவஞ் சக்கரத்தான் மாற்கருளஞ் சக்கரத்தான்
[4] றந்திரவீ ணைக்கனகஞ் சக்கரத்தான் - முந்திவருங்

கூரு. காலகா லன்பலநூல் காட்டினான் காட்டினு
னுலகா லன்பழைசை யாட்டினான் - கோலநான்

---

கூ0. பச்சைவடம் - ஆலமரம். பலகலைகளைப் பண்டைக்காலத்தில் உண்டாக்கியவர். அச்சிறுபாகை-அச்சிறுபாக்கம். ஆட்கொண்டோரென்பது அத்தலத்தில் ஸ்வாமியின் திருநாமம்; "அச்சிறுபாக்கமதாட்சி கொண்டாரே" என்பது, திருஞா. தே; "என்புற்ற வணிமார்ப ரெல்லையிலா வாட்சிபுரிந், தன்புற்று மகிழ்ந்ததிரு வச்சிறுபாக் கத்தணைந்தார்" என்பது பெரியபு. திருஞா. க0ருரு.

கூ0 - கூக. அரவப்பேரணையான் - திருமால். காழி - சீகாழி. சட்டையான் - சட்டைநாதர். கச்சூர் - திருக்கச்சூர். பவம் - பாவம். கீரம் - பால்.

கூஉ. துப்புஅட்டி - தூய்மையான பொருள்களைச் சொரிந்து; ஆட்டினான் - அடியவர்களால் திருமஞ்சனம் செய்யப்பெற்றவர். துண்டப்புள் - கூரிய மூக்கினையுடைய கழுகு; கழுகு பூசித்த கதையைத் திருக்கழுக்குன்றப்புராணம், கங்காசலச் சருக்கத்தாலுணர்க. 'சம்பாதிபோற்றினுர்' என்பர்பின்னும்;ருகக.

கூரு. கோ வண்ணத்தான்-கிரணம்பொருந்திய திருமேனியையுடையவர். போர் வையான் - போரையொழிப்பவர். பரிவேட்டி - வலம்வருதல்; இது பரிவேஷ்டிதமென்னும் வடமொழிச்சிதைவு.

கூ0-கூரு. இவற்றில் பச்சைவடம், கலை, மேற்கட்டி, சிறுபாகை, அணை, பாகு, சட்டை, கச்சு, பவந்தம், துப்பட்டி, துண்டம், கோவணம், போர்வை, வேட்டியென்னும் பருத்திநூற்காரியப்பொருள்களின் விசேடப்பெயர்கள் தொனித்தல் காண்க. பவந்தம் - திரை.

கூச - கக0. இக்கண்ணிகளில் பலவகையான மடக்கணிகள் வந்திருத்தல் காண்க.

கூச. மந்திரமாகிய அஞ்சக்கரம் - பஞ்சாக்ஷரம். மாலுக்கு அருளிய அழகிய சக்கராயுதம். வீணையைத் தாங்கிய திருக்கரம்.

கூரு. காலசங்காரர்; மிருத்தியுஞ்சயேசுவரரென்று இங்கே ஒரு மூர்த்தியுளராதலின் அதுபற்றி, "காலகாலன்" என்றுரென்றுமாம். பலநூல்களைச்

(பி-ம்.) [1]'பேரணையான்றந்த' [2]'கீரனறுங்', 'கைரநறுங்' [3]'மேவிவளைந்த', 'மேவிவிழைந்த' [4]'தந்திரிவீணை'

௬௯௬. மாடன்மா டன்மதனை மாட்டினான் மாட்டினான்
வேடன்வே டன்முயலை வீட்டினான் - மூடர்களைச்

௬௯௭. சோதியான் சோதியான் றோலைத்தோ லாக்கினா
னாதியான் மாலைமா லாக்கினான் - பாதிதுகி

௬௯௮. ராகத்தா னாகத்தா னம்பினா னம்பினா
[1] னாகத்தா னாகத்தா னம்பினான் - [2]சேகில்

௬௯௯. கெழுமிவள ராகாச கேசன் மகேசன்
[3] பழகி யறிபாசன் பாச - னழகார்

௪00. நகுவெண் [4]டலையனா னந்த னனந்தன்
[5] றகுசெங் கனற்சந்தன் சந்த - னகிலங்

௪0௧. கடிவில்லன் வில்லன் கதனல்ல னல்லன்
வடிவங் குழைவல்லன் வல்ல - னடியார்

---

செய்தருளியவர். பின்னுள்ள காடு - மயானம். பழசை - பழையனூர் திருவாலங்காடு; அத்தலத்தைப் பழனையென்பது பழவழக்காதலின், சோழநாட்டிற் காவிரிநதியின் தென்கரைக்கண்ணதாகிய திருப்பழையாற்றிலுள்ள தலங்களுள் ஒன்றாகிய ஆறைவடதளியென்னும் தலமுமாம்; பழையாறு - பழசையென வழங்குகின்றது. அதிற் சிவபெருமான் நடனஞ்செய்ததாக அத்தலபுராணங் கூறும்.

௬௫ - ௬. நான்மாடம் - மதுரை. மாடன் - பொன்னிறமுடையவர்; மாடு - பொன்; "பொன்பனைத் தன்னவிறை" திருச். உ௧௬. மாட்டினான் - மாளச்செய்தவர், இடபவாகனமுடையவர். வேடனது வேடமுடையவர். முயல் - முயலகன். வீட்டினான் - வீழ்த்தினார்.

௬௭. சோதியான் - சோதியாதவர், ஒளியையுடையவர். தோல்-யானை. மால் - திருமால், மயக்கம்.

௬௭ - ௮. பாதி துகிர் ஆகத் தான் ஆகத்தான் - பாதிவடிவம் பவழம் போலத் தோற்றும்வண்ணம் திருமேனிகொண்டருளியவர். அம்பினான் அம்பினான் - கடலிற்றுயிலும் திருமாலை அம்பாகவுடையவர். நாகம்-மலை, பாம்பு.

௬௮ - ௯. சேகு-குற்றம்; சேகில் ஆகாசகேசன்; "ஆகாசகேசனை மாபுருடனை மாகேச்சுரனை யடையா நின்றேன்" ஆனைக்காப். பாசம்-அன்பு, பேய்.

௪00. ஆனந்தன் அனந்தன். கனற்சந்தன் - கனல்போலும் அழகுடையவர். சந்தன் - வேதத்தையுடையவர்.

௪0௧. கடியும்வில் - பினாகம். வில்லம் - வில்வம். கதன் அல்லன் நல்லன்; குழை வல்லன் - உமாதேவியார்க்குக் குழைந்த வன்மையையுடையவர்; குழைதற்குக் காரணமாகிய வல்லை (கொங்கையை) யுடையவரெனினுமாம். வல்லம் - ஒரு திருப்பதி.

(பி - ம்.) 1 'நாகத்தா னம்பினா னம்பினான்' 2 'சேகிற்' 3 'பழகியெறி', 4 'தலையின்' 5 'தகுகன்னச் சந்தனஞ்'

க0உ. [1] பணியும் பணியான் பணியும் பணியா
னணியு மணியா னணியா - னணிய

கOங. மலையான் மலையான் மலையா னிலவின்
கலையான் கலையான் கலையான் - புலையகலுங்

கOச. கேதாரன் கொக்கினிற கேதாரன் மூவிரட்டி
யாதார னெவ்வுயிர்க்கு மாதாரன் - வேதா

கOரு. மதித்தவளத் தண்ணு மலையான் கனலா
மதித்தவளத் தண்ணு மலையான் - விதித்ததிருக்

கOசா. கச்சாலை யானுடுங் கம்பத்தா [2]னுடுதுர
கச்சாலை யானுடுங் கம்பத்தான் - விச்சான்

கOஎ. றிருப்பாசை யானடங்குஞ் சித்தான் பவுரி
திருப்பாசை யானடங்குஞ் சித்தான் — றருப்போ

கOஅ. விரங்கு[3]கயி லாயமலை யேற்றான் பலபு
ளிரங்குகயி லாயமலை யேற்றான் - மருங்கு

---

கOஉ. பணி - தொண்டு, பாம்பு, ஆபரணம். அணியான் - அழகியவர். அண்ணியவர்.

கOஉ - ங. அணி அமலையான். மலை - பருப்பதம். மலையான் - மாறுபாடில்லாதவர். கலை - பிறை, நூல்கள். கலையான் - கலைதலில்லாதவர்.

கOச. கேதாரம் - ஒரு திருப்பதி. கொக்கின் இறகையே மாலையாக வுடையவர்; மலர் விசேடமாகிய கொக்கிறகுமாம்.

கOரு. மதி தவளம் தண் ஆம் அலையான் - திருமால். மதித்த வளத்து அண்ணுமலை.

கOசா. கச்சாலையான் - நாஞ்சிக்கண்ணதாகிய கச்சபாலயத்தையுடையவர்; "கச்சிக்கச்சாலயம்" தண்டி. உரை - மேற். ஆடும் கம் பத்தான் நாடு துரகச் சாலையான் - பகைவரை வெல்லும் இராவணனது நாட்டினைக் குதிரைச்சாலையாகவுடையவர் ; கம் - தலை ; இராவணன் வேதத்தில் வல்லவனென்றும் அதனால் இலங்கையில் வேதங்கள் மிக்கு வழங்கினவென்றும் கூறுவர். சிவபெருமானுக்கு வேதத்தைக்குதிரையென்றல்மரபு. நாடும் கம்பத்தான்; கம்பம்-திருவேகம்பம். விச்சு — வித்து - விதை.

கOஎ. திருப்பாசை-திருப்பாசூர். அடங்கும் சித்தான். பவுரி-கூத்தின் விகற்பம்; திருப்பு ஆசையான்; ஆசை - திசை. நடம் குஞ்சித்தான்.

கOஎ - அ. தருவைப்போலே இரங்குகின்ற திருக்கரத்தில் ஆய்கின்ற சோற்றை ஏற்றருளியவர். பலபுட்கள் ஒலிக்கின்ற கைலாயமலையையும் இடபத்தையுமுடையவர்.

கOஅ - கூ. மருங்கு தர வரத்தினன் - மருங்கே தருதற்கு வரத்தை யுடையார்; வரதக் கரத்தினர். கடு கைத்து ஆரான் - விடத்தை வெறுத்து உண்ணுதவர்; விருப்பத்தோடு உண்டவர். பிறவியாகிய தராவிற்கு அரம்போன்றவர்; தரா - உலோகவகையில் ஒன்று. கடுக்கைத்தார் - கொன்றைமாலை.

(பி - ம்.) [1]'பணியும் பணியும்' [2]'காட்டுதுர', 'நீடுதுர' [3]'கயிலாயவலை'

கoகூ. தரவரத்தி ஞன்கடுக்கைத் தாரான் பிறவித்
தரவரத்தி ஞன்கடுக்கைத் தாரான் - விரவியபொற்

ககo. கல்லா லடியான் கடாவினுன் போர்வென்றான்
கல்லா லடியான் கடாவினு - னல்லாலி

ககக. ஞல்வர்க்கும் போதித்தான் ஞானத்தின் பாகத்தான்
மால்வர்க்கஞ் சோதித்தான் மாயத்தா - னூல்வர்க்க

ககஉ. மேலானுன் மேலானோர் வீடானுன் வீடாதோர்
பாலானு [1]னென்னுவின் பாலானுன் - வாலாருந்

ககங. [2] தும்பையன் சண்பையன் [3]சுந்தரன் சந்தரன்
சம்புவண் டன்சிவன் சங்கரன் - சிம்புளன்

ககச. வானனிலந் தீநனிலம் வாரியெனு மைந்தொகைதா
னுனவன் பேதமு மானவன் - மீனவன்

ககரு. பற்கன் விசிட்டன் பரம பதமென்னுந்
[4] தெற்கண் கயிலைச் செகநாதன் - முற்கோலி

ககசு. வேதப் பெருமான் விதித்த பெருமாசி
மாதத் திருநாளின் மற்றொருநா - ளாதி

ககஎ. புரண பரஞ்சோதி பொன்மன் டபத்தே
பூரணகல வீற்றிருந்து முன்னுட் - [5]பொருளுதவத்

ககஅ. திண்காப் பணிகரத்திற் சிந்தா மணிகளுமிழ்
வண்காப் பணிந்தருளி மற்றைநா - ளொண்கதிரோன்

ககக. றென்கயிலா யம்பணிந்து செல்வான் வடவெள்ளிப்
பொன்கயிலா யம்பணியப் போனதற்பி - னன்கருணைக்

---

ககo. கடாவினுன் போர் - யமனுடையபோரை. அடியான் கல்லாற் கடாவினுன்; அடியான் - சாக்கியநாயனுர்.

ககக. ஞானம் - ஞானப்பூங்கோதையம்மை.

ககஉ. நாவின்பால் - நாவினிடத்தே. வால் - வெள்ளை.

ககங. சந்து - தூது. அண்டன் - தேவர்.

ககச. மீனவன் - சுந்தரபாண்டியராக எழுந்தருளியிருந்தவர்.

ககசு. வேதப்பெருமான் - பிரமன்.

ககஎ. புரணம்=ஸ்புரணம் - தோன்றுதல்.

ககஎ - அ. பிறருக்குப் பொருளை உதவுதற்குத் திண்ணிய கா முன்னுட் பணிந்தகரம்; கா-கற்பகம். சிந்தாமணிகளை உமிழுகின்ற வளவிய காப்பு-சர்ப்பரக்ஷை.

ககக. செல்வான் - சூரியன். சூரியாஸ்தமயத்தின்பின்பு.

ககக - உக. 'நன்கருணை' என்பது முதல் 'நீலத்திருச்சாந்துசாத்தி'

(பி - ம்.) 1 'என்னுவிற் பாலானுன்' 2 'தும்பையன் சண்பகன் சுந்தரன் சங்கினன்' 3 'சுந்தரன் மந்திரன்' 4 'தெற்கின்கயிலை' 5 'இரணியமெய்த்திண்'

## நீலத்திருச்சாந்துக் காப்பு.

கஉ0. கள்ளவிழிக் கண்மணிதான் கண்ணப்பன் கண்மணிக்கா
வுள்ளொதுங்கி மேல்வந் துதித்ததெனா - [1] நள்ளருளின்

கஉக. கோலத்தி லே[2]கலந்த கோளரவி னீலமெனா
நீலக் கரிமதத்தி னீரென்னப் - பாலடைந்தார்

கஉஉ. துன்றளக மென்னத் தொழுதெதிரே கோடேறி
நின்ற முராரி நிழலென்னச் - சென்றுவளை

கஉங. முன்கை[3]யபி ராமி முளரிக் கலங்கரித்த
மென்கடக நீலமணி விம்பமெனத் - தன்களங்கந்

கஉச. திங்கள் சொரிந்ததெனச் சித்தசவே ளன்றெரியப்
பொங்குவிழி யின்னும் புகைந்ததெனா - [4]வங்குரித்து

கஉரு. வெங்கோபங் கொண்டெழுந்த வீரன் கருவென்னச்
செங்கோ கனகத்துத் தேனென்னத் - துங்கத்

கஉசு. திருவிற் குனித்துச் செருமுகத்தே வாங்கும்
புருவத் திடைநாண் புரளக் - கரியகணை

கஉஎ. வைத்ததெனக் காமன் வடிவழகை வாங்கிவைத்த
சித்ரமெனக் கங்கை செயலெல்லா - மெத்தெனவே

கஉஅ. யொற்றிருந்து கேட்கு முமையென்னத் தேவருடன்
மற்றவரைக் காத்த மறுவென்ன - நெற்றித்

கஉகூ. திலகமுற நீலத் திருச்சாந்து சாத்தி
யலகிலணி பூண்ட வழகா - யுலக

கங0. மொருமூன்று நான்மறையு மும்பர்களும் போற்றத்
திருவீதி போந்து திரும்பி - யருளியபின்

கஙக. பண்பட்ட நூற்சிலந்தி பத்திமையா லுண்மகிழ
வெண்பட்டு நூலாடை மேற்சாத்திக் - கண்பனிப்பக்

---

என்பது இறுதியாக ஒருதொடர்; அ - ஆம் திருநாளிரவில் திருச்சாந்தணிதல் கூறப்படுகின்றது; இது கிருஷ்ணகந்தோத்ஸவமெனப்படும்.

கஉக. பாலடைந்தார் - மதுரைக்கன்னியர்கள்.

கஉரு. வீரன் - வீரபத்திரர். தேன் - வண்டு.

கஉசு. கரியகணை - திருமாலாகிய அம்பு.

கஉஅ. காத்த மறு - விடம்.

(பி - ம்.) 1 'கள்ளிருளின்' 2 'கரந்த' 3 'அபிராம முளரிக்கு' 4 'அங்குரிக்க', 'அங்குதித்து'

கஙஉ. கற்பூரஞ் சாத்திக் [1]கலவைகுளி ரச்சாத்திச்
சொற்பூந் தவளத் தொடைசாத்தி - நற்புடையில்

கஙங. வெண்சா மரையிரட்ட வேயுறுதோ ளாற்பரித்துத்
தண்சாய னாமகளிர் சங்கமாய்ப் - பண்சாரச்

கஙச. செந்தீபக் கஞ்சந் திரண்டலரப் பொன்முகரி
யிந்தீ வரமுண் டிளந்தென்றல் - வந்துலவத்

கஙரு. திங்க ணிலாவெறிப்பத் தென்பீட முன்றிலிலே
யங்க ணுலாப்போந் தருளியபி - னெங்கள்பெருஞ்

கஙசா. சைவ மறையோர் சதுமறையின் காரணத்துத்
தெய்வமகா பூசை செலுத்துதலுங் - கையி

கஙஎ. லரும்பள்ளி வேளெய்ய வன்றவனைப் [2]பாரா
வரும்பள்ளி வாச மணுகி - விரும்பி

கஙஅ. யகிலாண்ட மீன்றாளை [3]யவ்விருளிற் கூடி
யகிலாண்ட பூண்முலைப்போ ராடி - மிகவுறங்கிச்

கஙகூ. செங்கதிரோன் கைமலரச் செந்தா மரைமலர
மங்கையுடன் [4]செங்கண் மலர்ந்தருளிக் - கங்கைநீர்

கச0. கண்ணப்பன் வாய்நீர் கரியுமிழ்நீர் கண்ணப்பன்
வண்ணச் [5]செருப்பணிந்த வார்சடைமே - லெண்ணத்திற்

கசக. புக்கார் பவங்கடியும் பொன்முகரி நீராடி
மிக்கான பூசை விதிகொண்டு - திக்காடை

---

கஙஉ. இக்கண்ணிமுதல் வெள்ளைசாத்துதல் கூறுகின்றார். தவளத் தொடை - தும்பைமாலை; இஃது இத்தலத்தில் மிக்க விசேடமுடையது.

கஙங. தோளாற் பரித்து நாமகளிர் சங்கமாய்ச் சாமரை இரட்டவெனக. சாமரையிரட்டுமகளிர் வெள்ளணியணிந்திருத்தலின், கலைமகள் போல்வாரென்பார், 'நாமகளிர்' என்றார்; திருமகள் போல்வாரை, 'இந்திரைகள்' என்பர்பின்; உ0கூ.

கஙரு. தென்பீடம்- தக்ஷிணமூர்த்தியின்பீடம்; இது வைதிகபீடமெனப் படும்.

கஙசா. காரணம் - காரணாகமம்.

கஙஎ. அரும்பை அள்ளி. பள்ளி - படுக்கை.

கஙஅ. அகிலாண்டம் - எல்லாஅண்டங்களையும். அகில் ஆண்ட - அகிற் புகையை ஆண்ட.

கஙகூ. கை—கரம் - கிரணம்.

(பி-ம்.) [1]'கலவைத் தளிர்சாத்தி' [2]'பாராது' [3]'அன்றிருளிற்' [4]'சேக்கை வளர்ந்தருளி' [5]'செருப்பிருந்த'

கசுஉ. மண்டுகரி யேற மதவாடை கொம்புகொளப்
புண்டரிக வாடை பொறிதாக்கக் - கண்டிகழா

கசுங. நீவிக் கலைசாத்தி நீடலையி லேழலைகைப்
பூவிட்ட கச்சுப் புறத்தார்த்து - மூவுருவு

கசுச. மொன்றுதல் காட்டு முபவீத மார்பணிந்து
பொன்றாத தொல்லைப் பொருளெல்லாஞ் - சென்று

கசுரு. முடியு மிடத்தே முடிபுனைந்து சேணூர்
சடையு மிளம்பிறையுந் தாழப் - பிடியிடஞ்சே

கசுசு. ரிக்கயிலைக் காளத்தி யானைக் கியலோடை
தக்கதெனப் பட்டந் தரித்தருளி - நக்கருக்குத்

கசுஎ. தேங்குழையுந் தோடுஞ் சிலையிடத்தி லுள்ளவெனப்
பூங்குழையுந் [1]தோடும் புடைசூட்டி - மூங்கிற்

கசுஅ. [2] சகோதரரென் றூரத் தழீஇக் கழுத்துமுத்த
[3] மகோததிநீ லத்தை மறைக்கக் - ககோதரநற்

கசுகூ. பையரா மெய்க்குளுமிழ் பன்மா மணிவடம்போற்
செய்ய[4]மா ணிக்கவடஞ் சேர்ந்திலங்க - வெய்யிற்

கஎ0. கணத்தணியாய்ப் பல்லுலகாய்க் கங்கைப் படியாய்
மணிப்பதக்க ராசி மலியப் - பணிக்கிரணப்

கஎக. பாந்தண் மலைவலியைப் பார்த்துச் சுழலவிட்டுப்
போந்ததென வாகு புரிவயங்கக் - காந்தி

---

கசுஉ. மதவாடை - யானைத்தோலாகிய ஆடை. புண்டரிகவாடை - புலித்தோலாகிய ஆடை. 'கரியேற', 'கொம்புகொள', 'பொறிதாக்க' என்பன சிலேடைகள்.

கசுங. ஆதிசேடனாகிய கச்சு.

கசுசு. காளத்தியானையென்பது இத்தலத்தில் ஸ்வாமியின் திருநாமம். ஓடை - நெற்றிப்பட்டம்.

கசுஎ. குழை, தோடு என்பன ஆபரணவிசேடங்கள்; இவற்றிற்கு முறையே தளிர், பூவிதழென வேறு பொருளுங்கொள்க. சிலை - மலை.

கசுஎ - அ. சிவபெருமான் மூங்கிலிற்றோன்றியவராதலின் அவரைச் சகோதரரென்று முத்தம் கருதியதென்றார். மகோததிநீலம் - விடம். ககோதரம் = காகோதரம் - பாம்பு.

கசுகூ. அரா - காளமென்னும் பாம்பு.

கஎக. வாகுபுரி - வாகுவலயம்.

(பி - ம்.) [1]'தோடும் புறத்தார்த்து' [2]'சகோதரனென்று' [3]'மகோதரநீலத்தை' [4]'மாணிக்கஞ்சிறந்திலங்க'

௧௫௨. யுருக்கொள்வலயத் துமணி [1]யொன்பதின்ம ருற்ற
திருப்பதிக மென்னத் திகழ - மருப்பதத்துச்
௧௫௩. சந்திர னு மந்தக னுந் [2]தாருகனை வென்றாளுஞ்
சிந்தை யதிரச் சிலம்பதிர - வந்தரத்திற்
௧௫௪. கோத்தபெரு வெள்ளங் குடிக்கப் பசிகொண்டு
காத்திருந்த வங்கி கரத்தோங்கக் - கோத்திரத்தி
௧௫௫. லம்மை மருங்கிற் கலந்துதலை மோதுவபோற்
சும்மைகொடு செங்கைத் துடி துடிப்பக் - கொம்மைத்
௧௫௬. தனங்களுடை யார்வீதி சார்வளவு மில்லென்
றநங்கனை [3]யங் கோர்கை யமைக்கப் - புனைந்தமணிப்
௧௫௭. பச்சைக் கொழுந்தைப் பசும்புற் கொழுந்தெனவே
[4] நச்சிக் கரநவ்வி நாநீட்ட - மெச்சு
௧௫௮. பணியாட நீராடப் பைங்குவளை மாலை
யணியாடப் பொன்னிதழி யாட - மணமுண்டு
௧௫௯. வண்டாடக் கோடிதலை மாலையா டச்சுருதி
கொண்டாடத் [5]தொண்டர்குழாங் கூத்தாடச் - சண்ட
௧௬௦. முரசதிரத் தெய்வ முழவதிர [6]நாக
சுரமதிரச் சங்கந் தொனிப்ப - வரையரையன்
௧௬௧. மாக்கற் பகவல்லி வாளிக் கிரணவிழி
தாக்கத் திருவாடு தண்டேறி - நோக்கினுற்
௧௬௨. சீறுமத னுக்குதவி செய்யவோ வென்றணுகிக்
கூறு மதி[7]போற் குடைநிழற்றத் - தேறமுத
௧௬௩. லன்னமா னன்கண் டதிசயித்துப் [8]பார்த்துழல
வன்னமா வெண்சா மரையசையத் - தன்னை
௧௬௪. யலக்கணற வாழ்த்து மடியார் பவத்தை
விலக்குவபோ லாலவட்டம் வீசத் - துலக்குமணி

---

௧௫௨. ஒன்பதின்மர்-திருவிசைப்பாக்களை அருளிச்செய்த திருமாளிகைத் தேவர் முதலியோர்.

௧௫௨ - ௩. பதத்து அதிர. தேய்ப்புண்டமையாற் சந்திரனும், உதையுண்டமையால் யமனும், கூத்தில் தோல்வியுற்றமையால் காளியும் சிந்தை நடுங்கினர்.

௧௫௪. கோத்திரம் - மலை. ௧௫௫. துடி - உடுக்கை.

௧௫௭. நவ்வி - மான்.

(பி - ம்.) [1]'ஒன்பதுசுளுற்ற' [2]'தாருகனைக் காய்ந்தாளுஞ்' [3]'ஓர் செங்கை' [4]'நச்சுக் கிரநவ்வி' [5]'தொண்டர்குழாங்' [6]'நாகசரமதிரச் சங்கநதழங்க', செம்பொனரசதிரச் சங்கமதிர' [7]'போல்வெண் குடைநிழற்ற' [8]'பார்க்கவுழல்'

கசுரு. யம்பொற் [1]களாசி யடைப்பைவரக் கஞ்சுகிகள்
செம்பொன் மணிவேத் திரம்பிறங்க - வெம்பரித்

கசுசு. தேசு பெறுங்கனகத் திண்கோ புரநிரையின்
வாசல் பலகடந்து வந்தருளி - வீசுகதி

கசுஎ. ராழியாற் பொற்கொடியா லாடகப் பொற்றொடையால்
வாழி மணிவடத்தான் மாலையாற் - கேழ்கிளருஞ்

கசுஅ. சங்க [2]மணிகும்பந் தாங்கலாற் பாகத்துச்
செங்கணெடு மாலனைய தேரேறி - மங்கையுடன்

கசுகூ. சங்கு திமிலை தடாரி குடமுழா
மங்கல கீத மகர[3]யாழ் - பொங்கிய

கஎo. சச்சரி பேரி தலைமயங்கிக் கம்பிக்கப்
பிச்ச வணிகள் பிறங்கியிட - வுச்சியிலே

கஎக. [4] யண்சந் திரனைவென் றண்டவற்குச் சந்திரன்போல்
வெண்சந் திரவட்ட மேலாடக் - கண்சாத்து

கஎஉ. [5] வள்ள லநுபமத்து மாலுமய னுங்கருடப்
புள்ளுமன்னப் புள்ளும் பொலிந்தேறத் - தள்ளிக்

கஎங. [6] கிரியி னரியுமெரி கின்றவனும் வெள்ளைக்
[7] கரியு மரியுங் கடவப் - பெரிய

கஎச. தடமையுரு வானவனுந் தானவனும் பொற்பா
ரிட[8]மையிட மேறி யிறைஞ்சக் - குடதிசையிற்

---

கசுரு. களாசி - காளாஞ்சி. கஞ்சுகிகள் - சட்டையிட்டோர்.

கசுஅ. மங்கையுடன் தேர்மேலேறி.

கசுஎ - அ. தேருக்கும் திருமாலுக்கும் சிலேடை: ஆழி - உருளை,சக்கரம். பொற்கொடி - பொன்னாலாகிய துவசம், திருமகள். மணிவடம் - அழகிய (இழுக்கும்) வடம், இரத்தினமாலை. சங்கம், மணி, கும்பம் ஆகிய இவற்றை; குடக்கூத்து ஆடியபொழுது திருமால் கும்பந்தாங்கினர்.

கஎo. கம்பிக்க - அதிர்ந்து முழங்க; 'கம்பிக்குந் தெய்வமுரசு' என்பர் பின்னும்; ருசo.

கஎக. சந்திரவட்டம் - ஒருவகைவிருது.

கஎஉ. அநுபமத்துமால் - ஒப்பற்றமால்.

கஎங. கிரியின் அரி - இந்திரன். எரிகின்றவன் - அக்கினி. அரி-ஆடு.

கஎச. மை உரு வானவன்-யமன். தானவன் - நிருதி. பாரிடம் - பூதம்; மயிடம்=மகிஷம் - எருமைக்கடா; எதிர்நிரனிறை.

(பி - ம்.) 1'காளாஞ்சி' 2'மணிக்கும்பம்' 3'யாழ்செங்கோடு' 4'அண்சந்திரன்வளர வாண்டவர்க்கு, 'அஞ்சந் கரற்குவே றண்டவர்க்கு', 5 'வள்ளலனு மத்துவச' 6'கிரியுமரியும்' 7'கரியுமறியுங் கடாவ' 8'மயிட'

கஎரு. கானேறு நீர்க்கரசைக் கந்தச் சமீரணனை
மீனேறு மானேறு மேற்கொள்ள - [1]ஊனுருகிச்

கஎசு. சுற்றமா கக்கலந்த தோழனுந் [2]தோழனும்
பெற்றவிமா னத்தேறிப் பின்செல்ல - வொற்றைமருப்

கஎஎ. பாளிதுடி யாளி[3]யெனு மாதார பூதர்பெருச்
சாளியினு ஞாளியினுந் தாமேன்ற - வேனு

கஎஅ. நயச்சென் டடிப்பவனு நற்புடைக்கே சொற்கே
கயத்துங் கயத்துங் களிப்ப - வியற்காளி

கஎகூ. துங்கக் கலையேறச் சூலிநெடும் பேயேறச்
சிங்கத்தி லேறச் செழுங்கன்னி - சங்கமா

கஅ௦. யோரெழுவ ரோரெண்ம ரொன்பதின்ம ரோர்பதின்மர்
பாராப் பதினொருவர் பன்னிருவ - ரீரெழுவர்

கஅக. தத்தம் விமானந் தமிலேறக் கந்தருவர்
சித்தர் முனிவர் திரண்டேத்த - முத்தமிழாற்

கஅஉ. பல்லக்கைப் பெண்ணாகப் பாடினோன் வெண்டாளப்
பல்லக்கி லேயிருந்து பண்பாடக் - கல்லொக்க

கஅங. மேனாண் மிதந்தானை மெய்க்கா வணமேந்த
மாநா வலினரசை மாவேந்தக் - [4]கான

கஎரு. நீர்க்கரசு - வருணன். சமீரணன்-வாயு. மீனேறு - சுறாமீன். மானேறு - கலைமான்.

கஎசு. தோழனும் தோழனும் - குபேரனும் ஈசானனும்; சாரூபம்பெற்றவனாதலின், ஈசானனைத் தோழனென்றார். பெற்றவிமானம் - பெற்றுக்கொண்ட விமானம், இடபமாகிய விமானம்; எதிர்கிரனிறையாகப் பெற்றமும் விமானமுமெனக் கொள்ளினுமாம்.

கஎசு - எ. விநாயகரும் வைரவக்கடவுளும். ஞாளி - நாய்.

கஎஅ. செண்டடிப்பவன் - ஐயனார்; செண்டு - ஒருவகைப் படைக்கலம். புடைக்கு - பக்கத்தில். சொல் - புகழ். கேகயம் - மயில். கயம் - யானை.

கஎகூ. கலை - கலைமான்.

கஅ௦. எழுவர் - ஏழுமுனிவர்; சத்தகன்னியருமாம். எண்மர் - அட்டவசுக்கள். ஒன்பதின்மர் - நவக்கிரகதேவர்; பதின்மர் - தசப்பிரமர். பதினொருவர் - ஏகாதச உருத்திரர். பன்னிருவர் - துவாதசாதித்தர். ஈரெழுவர் - பதினான்கு மனுக்கள்.

கஅஉ. பல் அக்கு - பலவாகிய என்புகள். பாடினோன் - திருஞானசம்பந்தர்.

கஅங. மிதந்தான் - திருநாவுக்கரசர். அரசு - சுந்தரமூர்த்திநாயனார்.

(பி - ம்.) 1 'வானுருஞ்' 2 'தோழனும் பொற, பெற்ற' 3 'எனு மாபூதர் பூதர்' 4 'கானூர்'

கஅச. நரிக்குதிரை கொண்டோ னரவா கனத்தே
[1] தரிக்கமணித் தண்டேறந் தண்டி - திருக்கழலே

கஅரு. நூலின்வழி [2]கண்டோரு நொந்தீன்ற கற்சமத்திக்
கோலுஞ் சிவபதத்தைக் [3]கொண்டோரும் - நாலிரண்டிங்

கஅசு. தாவென்ன வெற்பிற் றலைமோதி [4]நின்றோருஞ்
சீவன்செல் கண்வழியே [5]சென்றோரும் - பாவனைக்கு

கஅஎ. ணன்பாக வேநம்பி நான்வந்தே னென்றோனும்
வெண்பா [6]விளக்கேற் றும் வித்தகனும் - பெண்பாகம்

கஅஅ. பெண்க ளுடைமையெனப் பேரின்பம் பெற்றோருங்
கண்களிக்கக் கோடகத்திற் காட்சிதரப் - [7]பண்களித்துப்

கஅகூ. பாடியுமர்ச் சித்தும் பணிந்தும் பதம்பெறும்பல்
கோடி யடியார் குழாங்கொள்ள - நாடளித்த

ககூ0. சோழ ரிருமருங்குஞ் சூழ்ந்துவரத் தொண்டையரும்
[8] பூழியருங் கேரளரும் போற்றிசெய - வூழி

ககூக. யெழுபிறப்புந் தானறுத்த யாதவர்கோ னின்று
செழுமணிப்பொற் செங்கோல் செலுத்தத் - தொழுகோயிற்

ககூஉ. சட்டமிடத் தோன்றிச் சதகோடி வைபவஞ்செய்
[9] சிட்டய ராமனின்று சேவித்துக் - கிட்ட

---

கஅச. தண்டி - தண்டீசர்.

கஅரு. நூலின் வழிகண்டோர் - சிலந்தியாக இருந்து வழிபட்டதேவர். கொண்டோர் - காளனென்னும் பாம்பாக இருந்து வழிபட்டதேவர்.

கஅசு. தலைமோதி நின்றோர் - யானையாக இருந்து வழிபட்டதேவர். சென்றோர் - கண்ணப்பநாயனார்.

கஅஎ. வந்தேனென்றோன் - சிவகோசரியார். வித்தகன் - நக்கீரர்; 'நந்தாவிளக்கெனவே நக்கீரா சொன்னதிரு, வந்தாதி யேகாதணி' என்பர் பின்னும்; ருஉரு; "சொல்லும் பொருளுமே தூத்திரியு மெய்யுமா, நல்லிடிஞ்சி லென்னுடைய நாவாகச் - சொல்லரிய, வெண்பா விளக்கா வியன்கயிலை மேலிருந்த, பெண்பாகற் கேற்றினேன் பெற்று" என்று இவர் கூறியிருத்தலால் இவரை வெண்பாவிளக்கேற்றும் வித்தகர் என்றார்; கயிலைபாதி காளத்திபாதித் திருவந்தாதி, க.

கஅஅ. பெற்றோர் - மதுரைக்கன்னியரிருவர்.

ககூ0. தொண்டையர் - ஆதொண்டைமானுடைய பரம்பரையரசர்.

(பி - ம்.) 1'தருக்க' 2'கண்டோனும்' 3'கொண்டோனும்' 4'நின்றோனும்' 5'சென்றோனும்-பூவுலகில்' 6'விளக்கேத்தும் வித்தகரும்' 7'பண்களிக்கப்' 8'பூழியரு மருங்கு' 9 'சிட்ட ருயரநின்று சேவிப்ப'

௧௯௩. வடமடஞ்சு மாமுனியு மாமணி கங்கைத்
திடமடத்து வாழ்தே சிகனுங் - கடலனைய
௧௯௪. கொண்டற் கொடை[1]யாறு கொத்தாரும் வெண்ணீற்று
வண்டற் பதினெண் மடத்தாரும் - [2]புண்டரத்துச்
௧௯௫. [3] சுத்தச் சிவாகமத்துத் தொல்லைநூற் காரணத்துப்
பத்துக் குடி[4]வேத பாரகரு - மத்தனருள்
௧௯௬. [5] வைத்திடுகோ யிற்கணக்கு மந்திரவோ லைக்கணக்கு
[6] முத்திரிக்குங் கூர முறையாரும் - பத்திபுரி
௧௯௭. யெட்டுக்கொத் தான விளையநா யக்கர்களும்
வட்டக் களபமுலை வண்ணவா - விட்ட
௧௯௮. சிறுபத்தி முல்லைநகைத் [7]தேவரடி யார்க
ளறுபத்து நாலுவகை யாரு - முறுதியின்மற்
௧௯௯. றுள்ள வடியாரு மோங்கு தமிழோருந்
தெள்ளிய பாடகருஞ் சேவிப்பக் - கள்ளாமதன்
௨௦௦. பூமழையு மேற்சொரிபொற் பூமழையு மந்தணர்கைப்
பூமழையு மண்டம் [8]பொதிந்தேற - மாமறுகி

௧௯௩. வடமடம் - சங்கர முனிமடம்; இஃது இத்தலத்திற் காலிகோபுரத்திற்கு வடக்கே மேற்குத் திருவீதிக்கு மேற்கே கருங்கல்மண்டப வடிவாக இப்பொழுதுள்ளது. மாமணி கங்கைத் திடமடம் - மணிகர்ணிகேசுவரமடம். இது திருக்கோயிலுக்குத் தெற்கேயுள்ளது.

௧௯௪. ஆறுகொத்தார் - யானைமுதலியவற்றிற்கு இடபமுத்திரைபோடுவோராகிய முத்திராதிகாரிகள் முதலிய ஆறுவகையினர். பதினெண்மடத்தார் - சிவாகமபத்ததிகள் பதினெட்டும் இயற்றிய சிவாசாரியர்கள் பதினெண்மர்களுடைய பரம்பரையினர்; அப்பதினெண்மர்களாவார்: துர்வாஸசிவர், பைங்களசிவர், உக்ரஜ்யோதி, ஸ்ரீகண்டர், விஷ்ணுகண்டர், ஸத்யோதர், வித்யாகண்டர், இராமகண்டர், ஞானசிவர், ஞானசங்கரர், ஸோமசம்பு, ப்ரஹ்மசம்பு, திரிலோசனசிவர், அகோரசிவர், வருணசிவர், ப்ரஸாதசிவர், இராமநாதசிவர், ஈசானசிவரென்பவர்கள்; "பதினெண் மடத்திற் பயிலு - முதலிகளும்" என்றார் திருவானைக்காவுலாவுடையாரும்.

௧௯௬. மந்திரவோலைக்கணக்குமுத்திரித்தல் - வேதாகமங்களை யெழுதுதல். கூரமுறையார் - கூரமென்னும் ஊரிலிருந்துவந்த முறையையுடையோரென்பர்.

௧௯௭. எட்டுக்கொத்தான இளையநாயக்கர் - திருவபிடேகத்திற்குப் பால் கொணர்தல் முதலிய எட்டுவகைத்தொண்டிற்கு உரியவர்கள்.

௧௯௮. தேவரடியார்கள் - உருத்திரகணிகையர்கள்.

(பி - ம்.) 1 'ஆறுகோத்திரரும்' 2 'பண்டைநூற்' 3 'சுத்தசிவாகமத்துத்' 4 'வேதபாரகரும்' 5 'வைத்தகோயிற்' 6 'உத்தரிக்குங் கூலமுடையாரும்' 7 'தேவரடியாரறு' 8 'பொலிந்தேற', 'பொலிந்தோங்க'

உ0க. லாணிக் கனகத் தமைத்தசிலை யான்வந்தான்
மாணிக்கச் சோதி மலைவந்தான் - பாணிதனிற்

உ0உ. [1] பத்துப் பிறப்பிற் பகழிப் பிரான்வந்தான்
[2] செத்துப் பிறவாத தேவன்வந்தா - [3]னித்திரையிற்

உ0ங. சார்ந்தாரைக் காத்த தயாவா ரிதிவந்தான்
சேர்ந்தார்க் கினிய சிவன்வந்தான் - கூர்ந்தசிவ

உ0ச. [4] நம்பிக்கு முன்னின்ற நம்பிக்கை யான்வந்தான்
றும்பிக்கை யானைத் துணைவந்தான் - செம்பவளச்

உ0ரு. சோதிப் பெருந்தேவன் சோதி விடங்கன்வந்தான்
போதிக்க வொண்ணுப் பொருள்வந்தான் - கோதற்ற

உ0சு. வாயிரநா மத்தான்வந் தானன்று செங்காட்டிற்
போயிரந்த பிள்ளைப் புலிவந்தா - னேயமென்றும்

உ0எ. வைத்த மலைக்[5]கொழுந்தான் வந்தான்வந் தானென்று
பத்திபுரி சின்னம் பணிமாறத் - துத்திவரி

## குழாங்கள்.

உ0அ. [6] நாக ருலகமணி நாக நிதம்பியரும்
பாக ருலகமொழிப் பாகரு - மேகமணி

உ0கூ. சந்திரனே போன்றமுக சந்திரலோ கத்தாரு
மிந்திரனு ரிந்திரைக ளெல்லாருங் - கந்தருவ

உகO. கன்னியருஞ் சித்தரிளங் கன்னியருங் கின்னரர்தங்
கன்னியருங் கிம்புருட கன்னியரும் - பொன்னின்

உகக. சிலைவா ழநங்க சிலைப்புருவத் தாரு
[7] மலைவா ழலையளகத் தாரு - நிலையாய

உகஉ. கண்ண னுலகமலர்க் கண்ணுரும் பூலோக
வண்ண மகளிர் வடிவெய்திப் - பண்ணையா

---

உ0உ. திருமாலாகிய பகழி.
உ0ங - ச. சிவநம்பி - சிவகோசரியார்.
உ0அ. பாகருலகம் - பிரமனுலகம். [மாம்.
உ0கூ. இந்திரைகள்-திருமகள்போன்ற மங்கையர்கள்; அரம்பையர்களு
உகO - கக. பொன்னின்சிலை - மேருமலை. அலைவாழ் அலைஅளகத்தார் - நீரரமகளிர்.

(பி - ம்.) [1]'பத்துப்பிறப்புப்' [2]'செத்துப் பிறவாச்சிவன்' [3]'இத்தரையிற்' [4] 'நம்பிக்குத் திண்ணனுக்கும்' [5]'கொழுந்தன்' [6]'நாக குலத்திலுள்ள நாக' [7] 'அலைவாழ் முகிலளகத்தாரும்'

உகங. யீட்டு மரவிற் கிடங்கொடுத்த தென்னென்று
கூட்டமிடுங் தோகைக் குழாங்களோ - காட்டுமுன்னே

உகச. யெங்க ணதியை யிவரடக்க லென்னென்று
பொங்கி வருமெகினப் புட்களோ - பங்கமகத்

உகரு. தோடு முழையை யுரித்தா ரிவரென்று
தாடி வருமானின் சங்கமோ - சூடேற்றி

உகசு. மீனக் கொடியானை வென்றகொடி யாரெனச்சூழ்
கானக் குயிலின் கணங்களோ - யானை

உகஎ. பிடித்தபிடி யாயுரித்த பேராள னைப்பின்
பிடித்த பிடியின் பெருக்கோ - சடைக்கு

உகஅ. ளிளைத்தமதி சிக்கியதென் றெவ்வுடுவுங் கூடி
வளைத்தனவோ வென்று மருளக் - களித்துமணி

உகக. மாளிகையிற் சூளிகையின் மண்டபத்திற் கோபுரத்தி
லாளிநிரை முற்றத்தி லாடரங்கிற் - சாளரத்தின்

உஉ0. மாடத்தி லாலயத்தின் மாமகர தோரணத்திற்
கூடத்திற் கூடிக் கொடியிடையீ - ரோடிவருங்

குழாமகளிர் கூற்று.

உஉக. கல்லா லடியிற் கரும்பினிர தந்தன்னை
யெல்லாருங் கண்ணு லினிதருந்தீர் - பொல்லாத

உஉஉ. வாலால முண்டலகை யாளு மடையாளக்
கோலா கலக்குறியைக் கும்பிடீர் - காலா

உகங. அரவு - காளர்; பூண்களாகிய பாம்புகளுமாம்.

உகச. அன்னப்பறவை கங்கையில் வாழ்தற்குரியது. மகம் - தக்கனுடைய யாகம்.

உகரு. தாடி = தாவடி - தாண்டி; தொகுத்தல். உகசு. யானையை.

உகசு. குயில் மன்மதனுக்குக் காளம். கானம் - காடு, இசை.

உகஅ. உடு - நக்ஷத்திரம்.

உகக. சூளிகை - மாளிகையின்மேலுள்ள அறை. ஆளி - அத்தியாளி: "அறுகுசூழ்நிரைத்தெற்றி" திருவிளை. உ0: எ.

உஉ0. மகர தோரணம் - மகரதோரணத்தையுடையவாயில்.

உஉக. கரும்பு - திருக்காளத்திநாதர். இரதம் - தேர், சாறு.

உஉஉ. கால் - கண்ணப்பருடைய பாதம்.

4

உஉக. லுமைதத்தமுடி யார்வந் துலாத்துமதற் பாரீர்
பதைத்ததிரு வாபரணம் பாரீ - ரதற்கடங்கா

உஉச. வெண்மதியைப் பாரீரவ் வெண்மதிபோற் சிக்காமற்
பெண்மதியை நன்றூப் பிடித்திடீர் - திண்மலையா

உஉரு. ளிச்சுதர்கள் வீறினூ ரித்[1]தேவி யார்க்கின்னம்
பச்சுடம்பென் பாலென் பகர்ந்திடீ - ரெச்சி

உஉசு. லிறைச்சிறுகர் வோமென் றெலும்பணிய வேண்டா
மறைச்சுவிடீ ரென்று வணங்கீர் - குறிச்சணிய

உஉஎ. விந்தத் திருவுரத்துக் கேனக்கொம் பேன்கொங்கைத்
தந்திக்கொம் பாகாதோ தான்கேளீர் - [2]முந்தியதா

உஉஅ. யோங்கியவோங் காரத்தி னுட்பொருளாய் நின்றதுபோற்
[3] றெங்கு[4]திரு வாசியினைச் சேவியீ - ராங்கார

உஉகூ. மாலு மயனு மதிக்கமிதிக் கப்பெற்ற
காலின் முயலகனைக் கைதொழீர் - கோலியெதிர்

உகூ0. நில்லீ ரெனவெதிரே நிற்பார் கதிரோனைப்
பல்லீருங் கையைப் பரவுவார் - வல்லி

உகூக. திருத்தோடு நிற்கச் சிவந்தபா திக்குக்
கருத்தோடு நெஞ்சங் கரைவா - ரெருத்தோனே

உகூஉ. வில்லடி[5]மே லேயிருந்த மெல்லடியா ளாரென்பார்
வல்லடியோ வந்த வரத்தென்பார் - நல்லடியான்

உகூகூ. கண்களையு மட்டுங் கரையாத கன்னெஞ்சம்
பெண்களையோ நாடுமெனப் பேசுவார் - திண்கிரணத்

உஉக. உலாத்தல் - பவனிவருதல். "சங்கத்துலாத்தினன்" என்றார் மூன்னும்; அடு. திருவாபரணம் - நாகாபரணம். அதற்கு - அப்பாம்பிற்கு.

உஉரு. பால் - பக்கம்.

உஉசு. இக்கண்ணியின் முதலடியில்,"ஆட்டைத்தான் தின்கிறான் எலும்பையும் கழுத்திற் போட்டுக்கொள்ளல் வேண்டுமோ" என்னும் பழமொழியின் கருத்து அமைந்துள்ளது. குறிச்சு - குறித்து.

உஉஎ. ஏனக்கொம்பு - பன்றிக்கொம்பு.

உகூக. திருத்தோடு - திருத்தத்தோடு. எருத்து - இடபம்.

உகூஉ. அருச்சுனன்வில்லடி. மெல்லடியாளென்றது கங்கையை. நல்லடியான் கண்ணப்பர் 'வல்லடி வரத்து' என்பது ஒருபழமொழி.

(பி - ம்.) [1] 'தேவிமார்' [2] 'முந்தித்தான்' [3] 'தேங்கொடிரு மாலிகையைச் சேவியீர்' [4] 'திருவாசிகையைத் தெண்டனிடீர்' [5] 'மேலேயிருந்த'

உ௲௪. தெண்மணிக ளேசாத்திச் சேடன்பூ சித்தவர்மேற்
கண்மணிக ளேசாத்திக் காட்டுவா - ருண்மயங்கிப்

உ௲௫. பூசலா மென்றாலும் பூசலாஞ் சந்தனத்திற்
பேசலா மோவென்று பேசுவா - ராசையா

உ௲௬. லத்தியா னேமுருவா லக்காள னோரானேம்
பத்தியா லாளீர் பரிந்தென்பார் - புத்தியெல்லாம்

உ௲௭. போயிரங்கு வீர்ஞானப் [1]பூவையணைந் தீரிளநீர்க்
[2] காயையணை யீரென்று கண்பிசைவார் - நேயங்

உ௲௮. கனியார்கல் லாலின் கனியார் மடவார்க்
கினியா ரினியாரிங் கென்பார் - முனியாம

உ௲௯. லேத்தவரு மெங்கட் கிரங்கீரோ சார்ந்தாரைக்
காத்தவரே யென்று கழறுவார் - பூத்த

உ௪0. பனியிதழி மார்பெமக்கே பங்கென்று கேட்கக்
கனியிதழி மாரைக் கடிவார் - தினமு

உ௪௧. மழைத்துவாழ் வித்தவரே யானுன் மடவீ
ரிழைப்பரோ வெம்மைநமக் கென்பார் - தழைத்தசுரைக்

உ௪௨. காய்வீணை யிட்டீரோ கைத்தாய ராலெமக்கு
வாய்வீணை யிட்டீரென் வந்தென்பார் - பாய்வார்போற்

உ௪௩. பாணிமா னுக்கெதிரே பார்வைமா னேத்துரப்பார்
நாணிமா னித்தோமே நாமென்பார் - பூணே

உ௪௪. டுறுவார் வடத்தி லுளமுச லாடப்
பெறுவா ரிவரிலொரு பேதை - குறுகாத

---

உ௲௪. சேடன் - ஆதிசேடன்; ஆதிசேடன் பூசித்தமை, திருக்காளத்தி புராணத்துள்ள, பலரும் சிலநதியும் பூசித்த அத்தியாயத்தில் ௲௫-ஆம் செய்யுளால் விளங்குகின்றது; 'சேடனடைந்த சிவபிரான்' என்பர் பின்னும்; ௫௭௬.

உ௲௫. அன்னத்திற் சந்துபேசலாமோ.

உ௲௬. அத்தி - கடல், யானை. உருவால் - கரியநிறத்தால்.

உ௲௭. ஞானப்பூ-ஞானப்பூங்கோதையம்மை. பூவையணைவீர் காயையணைந்தாலென்னகுறை?

உ௲௮. இனியார் - இனித்தலில்லார், இனியாராவார்?

உ௪0. பனியிதழி - குளிர்ந்தகொன்றைப்பூ. கனியிதழிமார் - கொவ்வைக்கனிபோன்ற அதரத்தையுடையவர்.

உ௪௨. வீணையிட்டீர் - வீணையையணிந்தீர். வாய்வீணை - வீண்மொழிகளை.

உ௪௩. பாணி - கை. மானித்தோம் - பெருமையுறச்செய்தோம்.

(பி - ம்.) 1 'பூவையணிந்தீர்' 2 'காயையணைவீர்'

## பேதை.

உசரு. தாயிற் சிறந்தாரைச் சாரும் புயங்கேசன்
[1] வாயிற் பெருதவிள மாணிக்க - நாயனர்

உசசு. செம்பொற் சரணஞ் செறியுங் களியானைக்
கொம்பிற் பிறவாக் [2]குறுந்தாள - நம்பனர்

உசஎ. [3] வேட்டிருக்கத் திண்ணனர் வேட்டம்போய்க் கொண்டுவரு
மூட்டிறைச்சி தோயாச் சுவைச்சிறுதே - ஞட்டியத்தர் [ஞ்

உசஅ. தண்டா மரையடிசேர் சங்கத்தோ னந்தாதி
யண்டா முழுச்சிற் றலங்காரங் - தொண்டாகித்

உசகூ. தண்கயிலை யாரைத் [4]தழுவுஞ் சிவகோசன்
வண்கைப் புகுதா மருக்கொழுந்து - வெண்கிரணச்

உருo. [5] சோமன் செறிசடையார் சொற்கயிலை வீதிதொறுங்
காமன் வளையாக் கருப்புமுளை - யீமனர்

உருக. கங்கைக் கரைக்காமன் [6]காவிபோற் கூடலிலே
வெங்கழுவிற் புக்கார் விரதம்போ - லங்கவரைச்

உருஉ. சொல்லா மகத்திற் சுரரெடுத்த வாயுதம்போற்
கல்லாக் கொலைபடைத்த கண்ணினு - ளெல்லார்க்குந்

உருங. தம்பிரான் பாலொடுங்குந் தக்கோ ரிருவருமா
யம்பினு கத்தொடுங்கு மண்டமுமாய்ச் - சம்பந்தன்

உருச. வண்ணக் குடத்தென்பு வைத்தெழுப்பு மங்கையுமாய்த்
திண்ணற் கொளித்திருக்குஞ் செங்கையுமாய்க்-கண்ணிருளு

---

உசரு. புயங்கேசன் - காளன். உசஅ. சங்கதோன் - நக்கீரர்.

உசகூ. சிவகோசன் - சிவகோசரியார்.

உருக. கங்கைக்கரையில் மன்மதனது நீலமலர்ப்பாணம் கொலைசெய்த தில்லாததென்றபடி; காமனையெரித்த இடம் கங்கைக்கரை. கங்கைக்கரை யென்பதற்கு இந்தத்தலத்தில் உள்ள மணிகர்ணிகையின் கரையெனினும்பொருந்தும். கழுவிற்புக்கார் - சமணர்; அவர்கள் விரதம் கொல்லாமை. அவரை - சிவபெருமானை.

உருஉ. மகம் - தக்கன் யாகம்.

உருங. தக்கோரிருவர் - பிரமனும் திருமாலும்; மதுரைக்கன்னியரிருவருமாம். அம்பு - திருமால். ஆகம் - உடம்பு.

(பி - ம்.) [1]'வாயிற் பிறவாத' [2]'குளிர்தாளம்' [3]'வேட்டிருக்கும்' [4] 'தழுவும் புயங்கேசன்' [5] 'சோமனெறிச்சடை' [6] 'காவியம்போல்'

உ௫௫. மண்டத் தமரு மருஞ்சக்ர வாகமுமாய்த்
துண்டப் பணிவாய்ச் சுடர்களுமாய்த் - தெண்டிரைவா

உ௫௬. யான்ற[1]வமு தக்குடமு மாகவிருந் திருந்திணிமேற்
றோன்றி வளருந் துணைமுலையா - [2]ளென்றுவிட

உ௫௭. முண்டார் திருச்சடைமே லுன்மத்த முண்குதலை
வண்டாய் மிழற்று மழலையாள் - சண்டேசன்

உ௫௮. போற்றும் பரமனார் பொன்கொழிக்கும் பொன்முகரி
யாற்றி னறல்போ லளகத்தாள் - கூற்றிலே

உ௫௯. யாங்கவுரி யல்லா தரும்பியவெண் ணுன்கறமுந்
தாங்க முயன்றனைய தந்தத்தாள் - பாங்கியென

உ௬0 நின்றுதனை நீங்கா நிழலை யுடன்கொண்டு
சென்று மனைபுகுந்து தேடுவாண் - முன்றிலிலே

உ௬க. மெத்துமணற் சிற்றில் விருந்தருந்த வாவென்று
சித்திரத்தி னோடொல்கிச் செப்புவாள் - கைத்தாயை

உ௬உ. நீங்கிப் பிரியா ணிலைக்கண்ணா டிப்பொருளை
வாங்கித்தா வென்று வருத்துவா - ளாங்கருணை

உ௬௩. யாய்நீர்மை வேட னபிடேக மேனியைப்போல்
வாய்நீ ரமுதொழுகு மார்பினா - டேய்நீர்மை

உ௬௪. வள்ள லடியார் மனம்போ லனுவளவுங்
கள்ள மடையாக் கருத்தினாள் - கிள்ளையுடன்

உ௬௫. ரூவித் தனைவளர்க்குந் தாயரள கச்சுரும்பை
நாவற் கனியெனவே நச்சுவாள் - பாவனையி

உ௬௬. லெண்ணிலா [3]ஞானவெளி யேகாந்த யோகியைப்போற்
றன்னிலே தான்பேசுந் தன்மையா - ளன்னைமார்

உ௬௭. மாணிக்கக் கல்லால் வயிடூ ரியமணியா
லாணிக் கனகத்தா லாரத்தாற் - பேணிக்

---

உ௫௫. அணடம்-முட்டை; ஆகாயமுமாம். துண்டப்பணி-இராகுகேது.
உ௫௭. உன்மத்தம்-ஊமத்தமலர். உ௫௮. கூறு-திருமேனியின்பங்கு.
உ௫௯. தந்தம்-பல்; பற்கள் முப்பத்திரண்டு. உ௬க. மெத்து-நிரம்பிய.
உ௬௩. வேடன் - கண்ணப்பர். மேனி - சிவபெருமானது திருமேனி.
உ௬௬. எல் நிலாம் - ஒளிவிளங்கும்.

(பி - ம்.) [1]அமுதக்குடமாயாகத்திருந்து' [2]'என்றவிட' [3]'ஞானவொளி'

௨௬௮. கொழுங்கமுகு நாட்டிக் குலாவியமுற் றத்தே
செழும்பவளப் பொன்னூசல் செய்ய - வெழுந்திவளு

௨௬௯. மென்னை மணியூச லேற்று மெனவேற்றி
யன்னையர்க ளாட்டு மளவிலே - சின்னங்க

௨௭௦. ளார்ப்ப மணிமுழவ மார்ப்ப வலம்புரிக
ளார்ப்ப வருமறைக ளார்ப்பவே - போர்க்கடலா

௨௭௧. னென்றுங் கழியான்பச் சேரியா னீர்க்குளத்தான்
கன்றுந்து மாற்கின்னுங் கால்வாயா - னின்றுதனை

௨௭௨. [1] யேத்தத் துரவா னிருங்கி ணறுந்தாரான்
[2] சாத்தியநீர் வற்றாத் தடாகத்தான் - கோத்த

௨௭௩. புரமடுவான் முத்தி புகற்கேணி யாவான்
சுரரிதய வாவியிலே தோய்வா - [3]னிரவலர்நோ

௨௭௪. யாற்றினான் சூலத் தகழுதிரங் கைத்தலையி
லூற்றினா னன்னினைவி லோடையா - னூற்றெட்டுத்

௨௭௫. தாளத்தி லாடுதிருத் தாளன் கயிலாயன்
காளத்தி நாதன கணநாதன் - வேளத்தன்

௨௭௬. கற்றைச் சடையன் கனகக் கொடியாடும்
வெற்றித் திருத்தேர்மேன் மேவுதலுங் – கொற்றமதன்

௨௭௭. மாசிப் புதுத்தேர் மருவினான் மற்றிவளு
மீசன் பழந்தேர்க் கிறங்கினா - னேசத்தின்

---

௨௭௦ - ௭௪. இக்கண்ணிகளிலே கடல், கழி, ஏரி, நீர்க்குளம், கால்வாய், துரவு, கிணறு, நீர்வற்றாத்தடாகம், மடு, கேணி, வாவி, ஆறு, அகழ், ஊற்று, ஓடை என்னும் பெயர்கள் தொனித்தல் காண்க.

௨௭௦. போர்க்கு அடலான்.

௨௭௧. கழியான் - நீங்காதவர். பச்சேரி = பசுமை ஏரி - பசிய அழகையுடைய உமாதேவியார். நீர்க்குளத்தான்-தேம்பாகுபோல்வார்; குளநீரெனக; குளம் - வெல்லம். கால்வாயான் - கிட்டுதற்கரிய திருவடியையுடையார்.

௨௭௨. துரவான் - நீக்காதவர். கிள்ளுகின்ற நறியதார். நீர் - குணம். தட ஆகம் - பெரிய உடம்பு.

௨௭௩. புரம் அடுவான். முத்திபுகற்கு ஏணியாவான். இதய ஆவி.

௨௭௪. ஆற்றினான் - தணித்தவர். அகழ்தலாலுண்டாகிய உதிரம். நல்ல நினைவில் ஓடுகின்ற அழகிடவர்; "மலர்மிசையேகினான்" என்பது திருக்குறள், ௩.

௨௭௪ - ௫. நூற்றெட்டுத் தாளம் - சச்சபுடமுதலியன.

௨௭௭. மாசிப்புதுத்தேர் - மாசிமாதத்திலே தோன்றும் தென்றல். இங்கே திருவிழா மாசிமாதமென்பது அறியற்பாலது. பழந்தேர் - பூமி.

(பி - ம்.) [1] 'ஏற்றத் துரவான்' [2] 'சாற்றியநீர்' [3] 'புரவலனோய்'

உஎஅ. முத்தேர் நகையாரு முன்கொண்டு போய்த்தொழுதா
ரொத்தே தொழுதங் குழையோரை - யித்தேரி

உஎகூ. லாரென்றாள் கல்லா லடிக்கரும்பென் றூரதனைத்
தாரு [1]மெனக்கென்பாளைத் தாய்மாருங் - காரிகையே

உஅ0. யிந்தக் கரும்பெவர்க்கு மெய்தாக் கரும்புகா
ணந்தவயன் மாலுக் கரிதுதான் - செந்தமிழ்சே

உஅக. ராலைவா யிற்பண்டு மாடுங்கா ணடியுங்கல்
லாலை யடைந்துமழி யாதுகாண் - சாலவொரு

உஅஉ. சற்றுங்கோ தில்லைக்காண் சாற்றி லதிகங்காண்
சிற்றின்பர் [2]நாவிற்சே ராதுகாண் - முற்றும்பே

உஅந. ரின்பப் பெருக்கங்கா ணிச்சை கடந்தேறு
மன்பர்க்கோ ராரா வமுதங்கா - ணென்பளவிற்

உஅச. றேருங் கரும்புந் தெருவகல நின்றமட
வாருங் கரும்பு மனைபுகுந்தார் - போர்மதனு

உஅரு. மிக்கரும்புக் கென்கரும்பை யீந்தாலு மீவரெனக்
கைக்கரும்பைக் கொண்டு கடிதகன்று - ணெக்குமே

உஅசு. பாலற் கவன்றந்தை [3]பாற்கடலீந் தாரையா
ராலைக் கரும்பளித்தா லன்றென்பார் - மேலொருத்தி

---

உஅ0-அந. சிவபெருமானுக்கும் கரும்புக்கும் சிலேடை. இங்கே வயல், ஆலையாடல், கல்லாலை, கோது, சாறு எனக் கரும்பிற்கேற்ற மொழிகள் அமைத்திருத்தல் காண்க.

உஅ0. அந்த அயனுக்கும் மாலுக்கும்.

உஅக. ஆலைவாய் = ஆலவாய்-மதுரை. கல்லாலை-கல்லாலாகிய ஆலையை, கல்லாலமரத்தை.

உஅஉ. கோது - குற்றம், சக்கை. சாற்றில் - இரதத்தில், திருவிழாவில் அல்லது சொல்லுமிடத்தில்.

உஅச. தேரும் கரும்பும் - தேரும் சிவபெருமானும். கரும்பு - பேதை.

உஅரு. இக்கரும்புக்கு - இந்தக் கரும்புபோல்வாளுக்கு.

உஅசு. பாலற்கு-உபமந்யுமுனிவருக்கு. அவன் - மன்மதனுடைய; "பாலுக்குப் பாலகன்வேண்டி யழுதிடப் பாற்கட லீந்தபிரான்" திருப்பல்லாண்டு. கடலையீந்தவர்கரும்பையளித்தால் அன்றென்பார் ஆரென்க.

(பி - ம்.) 1 'எனக்கென்னத்' 2 'நாவிற் செறியாகாண்' 3 'பாற்கடலை யீந்தாரார்'

## பேதும்பை.

உஅஎ. தக்க வெழிற்பெதும்பை தாதுகீங் காமுகுளப்
பக்குவப்போ தன்ன பருவத்தாள் - கைக்கு

உஅஅ. ளளவுமதன் செங்கோற் [1]சுகப்படா ளேனு
மிளவரசு [2]நாட்கொண் டிருந்தாள் - களபவிளங்

உஅகூ. குன்ற முலையார் குறிப்பறியுங் கொள்கையாள்
கன்று தளிர்கோதுங் கல்வியா - ளொன்றியசெம்

உகூ0. பொன்னை யறியப் புழுகறியப் பூவறியத்
தன்னை யறியுந் தறுவாயா - ளன்னமா

உகூக. [3] ராலி னடையா ளலையே றிளவன்னக்
காலி னடை[4]சிறிது கைவந்தாள் - கோலமத

உகூஉ. வெற்புவரு மட்டிறை வென்னிலொடுங் கிப்பார்க்குஞ்
சற்ப முகத்துமுனை தன்னைப்போற் - புற்புதம்போற்

உகூங. சித்தர்கடங் கையிற் சிவலிங்கம் போற்சிறிது
முத்திவரத் தோற்று முலையினா - ளத்தனுவே

உகூச. ளேழுலகு மோரிலக்கா வெய்ய வெனக்கினிமே
லேழு [5]கணையா மெனுங்கண்ணாள் - சூழுலகோர்

உகூரு. பூராயக் காட்சியே போதுமெனத் தென்கயிலை
யாரா [6]வமுத ரணிகொண்டான் - பாரிரந்த

உகூசு. தெண்டிரைமா லென்னச் சிறுகிக் கருகியடிக்
கொண்டுவள ராநின்ற கூந்தலா - [7]ளொண்டொடியா

உகூஎ. [8] ளொத்துக்கண் மையெழுதி யோதிகோ திப்பின்னி
நித்திலம்பூட் டத்தரித்து நின்றிடுவாள் - சித்தசன்றன்

உகூஅ. வாம்பரியுங் காகளமு மானத்[9]தே ருங்குணமும்
பூம்பகழி யும்பயிலும் பூங்காவி - லாம்பளிக்கு

---

உஅஎ. போது-மலரும்பருவமுள்ள அரும்பு. உகூ0. தறுவாய்-சமயம்.
உகூக - உ. மதவெற்பு - யானை. இறை - சிவபெருமான். சற்பம் = சர்ப்பம் - காளான்.
உகூங. முத்து இவர. உகூரு. பூராயம் - விருப்பம்.
உகூஅ. பரி - கிளி. காகளம் - குயில். தேர் - தென்றல். குணம் - நாண். பகழி - மலர்.

(பி - ம்.) 1 'அகப்படாதென்ன' 2 'தான்கொண்டெழுந்தாள்' 3 'ஆலி னடையா ளலையாற்றிள' 4 'சிறுத்து' 5 'கணைபென்ன வெழுங்கண்ணாள்' 6 'அமுதரணி யாட்கொண்டாள்' 7 'ஒண்டொடியார்' 8 'ஒத்திலங்கு மை யெழுதி யோதியைக்கோ திப்பின்னி' 9'தேருக்குடையும்'

௨௯௯. மண்டபத்திற் சோதி [1]மணிக்காந்த வேதிகையிற்
புண்டரிக மான்போற் பொலிந்தேறி - வெண்டரள

௩௦௦. மூர லொளிவீசு முத்தின் பருங்கழங்கும்
காரளக நீலக் கருங்கழங்கு - மாரமுதச்

௩௦௧. சேமவித ழைப்போற் சிவந்தபவ ழக்கழங்கும்
காம ருகிர்வயிரக் கற்கழங்கும் - தாமமலர்க்

௩௦௨. கைச்செம் பதுமரா கக்கழங்கும் பொற்கழங்கும்
பச்சை மயிலியலின் பைங்கழங்கு - மெச்சவெடுத்

௩௦௩. தொன்றென் றுலகமெலா மொன்ற யொடுங்கிவிடு
மன்றுமுள கல்லா லடிபாடி - நன்றென்

௩௦௪. றிரண்டென் றெழிலடியா ரீடேற நல்கும்
பரந்தவிரு பாதங்கள் பாடி - நிரந்தரமு

௩௦௫. மூன்றென்று மூன்று முதலிகளுந் தாம்புகழுஞ்
சான்ற சுருதித் தமிழ்பாடி - யான்றவொரு

௩௦௬. நாலென்று மாசிமக நாடோறுந் தெண்டனிடு
மூல மறையின் முடிபாடிச் - சாலவே

௩௦௭. யஞ்சென்று கல்லா லடியிற் கரும்பினுய
ரஞ்சு கொழுந்தி னடிபாடி - [2]நெஞ்சுருகி

௩௦௮. யாறென்று நாளு மமரர்புகுந் தாருடி
நீறணியும் பொன்முகரி நீர்பாடி - வீறுடனே

௩௦௯. யேழென்று முன்சிலந்தி யெய்தொளியைப் பின்கூடி
வாழு மெழுவர் வளம்பாடிக் - கேழின்

---

௩௦௦. மூரல் ஒளிவீசும் - மூரலைப்போல் வெள்ளொளியைவீசும்; பின்னும் இப்படியே கொள்க.

௩௦௧. உகிர் - நகம். ௩௦௨. கையைப்போற் செம்மைநிறமுள்ள.

௩௦௫. மூன்று முதலிகள் - திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் முதலிய மூவர்; "மூவாத பேரன்பின் மூவர் முதலிகளுந், தேவாரஞ் செய்த திருப்பாட்டும்" என்பது திருவேகாம்பரநாதருலா.

௩௦௭. கரும்பு - சிவபெருமான். ஐந்துதலைகளையுடைய நாகலிங்கமாக எழுந்தருளியிருத்தலின், திருக்காளத்திநாதரை, 'அஞ்சுகொழுந்து' என்பர்.

௩௦௮. ஆறு, சிலேடை.

௩௦௯. எழுவர் - காளன், யானை, கண்ணப்பர், சிவகோசரியார், நக்கீரர், கன்னியரிருவர்.

(பி - ம்.) 1 'மணிக்காந்தி' 2 'விஞ்சவே'

௩௧௦. மிசையேழு மாட விழியாட நாவி
விசையேழு மாட விருந்தா - ளசையுமின்னார்

௩௧௧. போது மடமயிலே போது மெனச்செங்கைப்
[1] போதின் விளையாடல்விடும் போதிலே - பூதப்

௩௧௨. படையான் பணித்தொடையான் பாணிச் சடையா
னுடையான் புலித்தோ லுடையான் - விடையான்

௩௧௩. [2] கழைத்தாயன் கண்டங் கரியா னருளுங்
கழைத்தாயன் கண்டங் கரியான் - குழைக்காதன்

௩௧௪. வேதப் பரியினான் வேத னுமலியான்
வேதப் பொருளினான் வேதாந்த - நாதன்

௩௧௫. குடங்கையணி தீயன் குளிர்த்தகயி லாயன்
றடம்பணில மாயன்சகாயன் - கடம்பவன

௩௧௬. னன்கழ லாடி நமன்கழல வேதாக்கும்
பொன்கழ லாடிதேர் போந்திடலுந் - தன்கழலை

௩௧௭. யேழு பிறப்பு மெறிவ தெனவெறிந்தா
டோழிமார் தாய்மார் தொழத்தொழுதாள் - [3]கீழிற்

௩௧௮. படிகிரையு மால்பிரமன் பல்வெளியுங் காணு
வடிமுடியைக் கண்ணா லளந்தாள் - முடியிற்

௩௧௯. கலைக்கொழுந்து சூடுங் கயிலாயச் செம்பொன்
[4] மலைக்கொழுந்தின் மார்பிலே வைக்க - முலைக்கொழுந்து

௩௨௦. போதா தெனச்சிறிது புந்தியிலே சிந்திப்பாண்
மாதா யரைப்பார்த்து மாதிவளா - ராதிக்

௩௨௧. கிசைய வினிதிருந்தா ளென்னையொரு பாவி
லசைய விருத்துமென வன்னார் - வசமோ

---

௩௧௨. பாணி - நீர்.

௩௧௩. கழை தாயன் கண் தங்கு அரியான் - வேய்குழலை உரியதாகக் கொண்ட திருமாலினுடைய விழிதங்கப்பெற்ற அரியவர். கழை தாயன் - மூங்கிலைத் தாயாகவுடையவர். கண்டம் கரியான்.

௩௧௬. நன்கு அழலில் ஆடியவர்.

௩௧௮. படிகிரையில் மாலும் பல்வெளியில் பிரமனும் காணாத.

௩௧௯. கலைக்கொழுந்து - பிறை.

(பி - ம்.) 1 'போதில் விளையாடும் போதிலே' 2 'கழைக்காயங் கண்டங்' 3 'கீழும், படிகிரையு மாலயனும் பல்லுபிருங் காணு' 4 'மலைக்கொழுந்தன் மீதிலே வைக்க'

௯உஉ. மலைக்கு மலைகொடுத்த வாருய்க் கயிலை
மலைக்கு மலைகொடுத்த [1]மானே - விலக்கியொரு

௯உ௯. மாதளிப்பா ருண்டோ மயிலேயென் பாரைநீ
ரேதறிவீர் பாரீ ரிவர்வேணி - [2]மீதிவளை

௯உச. யென்றவர்க்குக் கையா லிசைவித்தா ளவ்வளவிற்
சென்றது திண்டேர் செலநோக்கி - நின்றபே

௯உரு. ராசை யுடையீ ரறியாச் சிறியாளை
யாசையுடை யாருக்குள் ளாக்கினீர் - சீசியுமைச்

௯உசு. சொல்லாது சொல்லியலர் தூற்ருரோ தோற்றீர்போம்
[3] புல்லா விலையெடுத்துப் போடோமோ - சல்லாபக்

௯உஎ. கல்லினெறிந் தாறலைப்புக் காணோமோ கைகொட்டி
யெல்லவரு மம்பலத்தி லேற்ருரோ - [4]நல்லுடம்பைக்

௯உஅ. குத்துடம்பு செய்யோமோ கூத்தாடல் காணோமோ
[5] நித்தமொரு காலி னிறுத்தோமோ - கற்றவர்முன்

௯உ௯. [6] சங்கித் திடோமோ தலையி லடியோமோ
பங்கச் செருப்பேந்தப் பண்ணோமோ - செங்கைவிரன்

௯௯0. மூக்கிலே தான்வைத்து முந்திச் செவிபுதைத்து
வாக்கிலே நன்ருக வையோமோ - நோக்கியுமைக்

---

௯உஉ. கயிலைமலைக்கு - கயிலையிலெழுந்தருளிய சிவபெருமானுக்கு.

௯உ௯. வேணிமீது இவளைப்பாரீர்.

௯உச. என்று அவர்க்கு. நின்றபேர் - நின்ற மங்கையர்கள்.

௯உரு - ௯ச. 'ஸ்வாமீ, தொண்டுபூண்டொழுகும் அடியேங்களைத் தேவரீர் ஆட்கொள்ளாமையினுல் இன்ன இன்ன அபசாரங்களைச்செய்தேனும் தேவரீருடைய திருவருளைப் பெறுதற்குரிய ஆற்றலுடையேம்; பண்டைக்காலத்தில் அவ்வபசாரங்களியற்றியவர்களை விரைந்து ஆளவில்லையா' என்று உண்மையடியார்களுடைய செயற்கருஞ் செய்கைகளும் சிவபெருமானுடைய பெருங் கருணைத்திறமும் நன்குபுலப்படும்படி கூறுவாளாயினள்.

௯உரு. ஆசையுடையீர் - திக்காகிய ஆடையையுடையீர்.

௯உசு. அலர் - பழிமொழி, மலர். புல்லையுடைமையால் தோற்றீரென்க.

௯உஅ. குத்துடம்பு - குத்தப்பட்டஉடம்பு.

௯உ௯. சங்கித்திட்டவர் - நக்கீரர். தலையில் அடித்தவன் - அருச்சுனன். செருப்பேந்தப் பண்ணியவர் - கண்ணப்ப நாயனுர்.

(பி - ம்.) [1]'மான்மேல்' [2] 'மீதொருத்தி' [3]'புல்லாவிலை' [4] 'நல்லுடம்பிற் குற்றுடம்பு செய்யோமோ கூத்தாட்டங்' : குற்றுடம்பு-குறுமையான வுடம்பு; திருக்குற்ருலத்தில் திருமால் சிவபெருமானுனது ஈண்டு அறியற்பாலது [5]'நிற்க மொரு' [6] 'சங்கத் திடேமோ'

௩௩௧. காபாலி யென்னோமோ காட்டஞ் சமத்தோமோ
வாபோவென் றேவி வருத்தோமோ - பாப

௩௩௨. [1] மதிச்சுமட ராக்கோமோ மன்றாடி னுனு
[2] மெதிர்த்தகொடு நஞ்சை யிடோமோ - புதைத்திவற்றைப்

௩௩௩. பொய்தானென் றீரேற் புறம்பிடோ மோபண்டு
செய்தாரை யேதேனுஞ் செய்தீரோ - கைதவத்தை

௩௩௪. யேழைக்குக் [3]காட்டுவீ ரீடேறு வீரதனல்
வாழு மிரப்பகன்று வாழுமென - யாழுரையைக்

௩௩௫. கொண்டு மனைபுகுந்தார் கோலவே ளப்பருவங்
கண்டு சிறிதுசில காணுன்போல் - விண்டகன்றான்

மங்கை.

௩௩௬. வேறொருத்தி பூமங்கை வெண்டா மரைமங்கை
தேறு மிமயச் செயமங்கை - கூறுமொரு

௩௩௭. [4] மும்மங்கை யர்க்கடந்து மூவரைமெய்க் காவலிடுஞ்
செம்மங்கை யாகிவளர் சீர்மங்கை - வெம்மைவிட

௩௩௮. மன்றே தரித்தா னமுதகலா மண்டலமே
யின்றே யெழுந்த தெனுங்கண்ணாள் - மன்றேறி

௩௩௯. [5] யாடும்பரதத் தவன் சுரதக் கூத்தினுக்குக்
கூடுமிரு தாளக் குவிமுலையாள் - பாடகக்காற்

௩௪௦. பொற்றொடியாள் பாகன் [7]புகன்றுபுக வீணையுள்ளாள்
பற்றுதுடி யுள்ளாள் பணியுள்ளாண் - முற்றிவளை

---

௩௩௧. திருநாவுக்கரசு நாயனர், பாணபத்திரர், சுந்தரமூர்த்தி நாயனர்.

௩௩௨. மதியாகிய சுமையடையையுடையவர்.

௩௩௩. புறம்பென்றது விறன்மிண்டநாயனர் கூறிய 'புறகு' என்னும் மொழியை; 'புறம்புக்குள்ளானன்' என்பர் பின்னும்; ருசரு.

௩௨௪, ௩௩௫. மின்றபேர் மனைபுகுந்தார்.

௩௪௦. வீணை, துடி, பணியென்றது இவளுடைய உறுப்பின் விசேடங்களை.

(பி - ம்.) [1]'மதித்துவடர்'—துவடர் - பகைவர். [2]'இதத்தோடு நஞ்சை யிடோமோ' [3] 'காட்டினீர்' [4] மும்மங்கையுங்கடந்து' [5] 'ஆடும் தத்தா னவன் சுரதக்கூத்தாடக்' [6]'கூடியன தாளக்' [7]'புணர்ந்துபுகல்'

௩௪௧. * [1]மோசைமுதற் கங்காளன் முன்னூக்கப் பின்னூக்கு
மாசையிருட் டன்ன வளகத்தாண் - மாசில்

௩௪௨. * [2]விடைபிரிந்த வோதிமத்தின் மென்பெடைபோ லன்னை
யிடைபிரிந்து சேரு மினத்தாள் - கொடிமகரச்

௩௪௩. * சித்தச வேந்தன் சிறந்தகலை நூல்படித்துப்
புத்தரங்கி லேறப் பொருந்துவாண் - மத்தகத்துக்

௩௪௪. *கண்பொடிசெய் தானந்தோ [3]காற்பொடிசெய் தானிலையே
பெண்பெருமா னுக்கென்னும் பெற்றியாள் - பண்பிலவ

௩௪௫. னெய்யு மலரு மெழிலோ தியினலருஞ்
செய்யுஞ் செயலறியுஞ் செய்கையாள் - பெய்வளைக்கைத்

௩௪௬. தோழியருந் தானுமிளந் தோகைசூ ழூமெனவே
[4] யேழுநிலைக் குன்றத் தினிலேறி - வேள்வியிலே

௩௪௭. தன்னைமறந் தாட்டுத் தலைபடைத்த வம்மானை
யன்னைதனை யீன்றமலை யம்மானை - முன்னைநாட்

௩௪௮. கொங்கையொரு மூன்றுடைய கொம்பையரு ளம்மானை
யங்கையிலே வீற்றிருக்கு மம்மானைக் - கங்கையெனு

௩௪௯. மம்மானைப் பெற்றசடை யம்மானைப் பாடியவ
ளம்மானை யாடு மளவிலே - கைம்மானைச்

௩௫௦. சீரா டியதுடையான் செண்டா டியவிடையான்
[5] வேரா டியசடையான் வேடன்வாய் - நீராடிப்

௩௫௧. பாலாடி நெய்யாடிப் பண்டைத்தீ யாடியயன்
மாலாடி நின்று[6]தொழ மன்றாடி - [7]மேலாடி

---

௩௪௧. மோசை-விரலணி; "ஓ ளிழை மகளி ரிலங்குவளைத் தொடீஉ, மெல் விரன் மோசை" என்பது நற்றிணை, ௧அஅ; மோசை யென்பது வாழையின் பெயராதலின், வாழைமரத்தினடியிலெழுந்தருளிய கங்காளரேனினுமாம். முன்னூக்க - முன்னே செலுத்த. ஆசையாகிய இருட்டு.

௩௪௭. ஆட்டுத்தலைபடைத்த அம்மான் - தக்கன். அன்னை - உமாதேவியார்.

௩௪௮. கொம்பு - தடாதகாதேவியார். வீற்றிருக்கும் அந்த மானை.

௩௪௯. கைம்மான் - விநாயகக்கடவுள்.

௩௫௧. மேலாடி - எங்கும் வியாபித்தவர்.

(பி-ம்.) [1]'மோசமுறக்' [2]'விடைபிரித்த' [3]'காற்பொடியொவ் வானிந்த [4] 'ஏழுநிலக்' [5] வேரோடிய' [6] 'தொழு' [7] 'மேலாடு'

* இக்கண்ணிகள் ஒரேபிரதியில்மட்டுமிருந்தன.

௧௫௨. செம்பொற் கொடியாடுந் தேர்மீது தோன்றுதலு
மம்பொற் கொடியாட லாங்கொழிந்தா - ளெம்பிரான்

௧௫௩. பாதம் பணிந்தாள்பின் பார்வையிலே யம்பணிந்தாள்
போதம் [1]பணிந்தாள் புழுங்கினாள் - காத

௧௫௪. லடிமூள முத்தணிக ளத்தனையு நீறாப்
பொடிமூ டியதழலைப் போன்றா - ளுடையானைக்

௧௫௫. கண்ட பொழுதே கறுத்தான் கறுத்தவே
[2] ளண்ட வரிதினியென் றஞ்சுவாள் - [3]விண்டிவளுந்

௧௫௬. தாதியரை நோக்கித் தமியேனை யாள்வாரோ
[4] மாதினிடத் தாரென்றாண் மற்றவருங் - கோதையே

௧௫௭. வண்டிலங்கு மேனியிலே வாழு [5]மடவரலைக்
கண்டிலையோ நெஞ்சங் கரந்தாயோ - பண்டுநீ

௧௫௮. கற்றகலை யெல்லாங் கழன்ற கலையுடனே
யற்றவோ நின்னை யவர்கொண்டா - லுற்றனைக்க

௧௫௯. மாமியா ருண்டோ மலையிற் பெருநீலி
யாமவளுஞ் சக்களத்தி யாகாளோ - காமிக்கை

௧௬௦. தோற்சேலைக் கோபிச்சைச் சோற்றுக்கோ வோட்டுக்கோ
மேற்சாம்பற் கோசுடலை வீட்டிற்கோ - நாற்சந்தி

௧௬௧. யம்பலத்துக் கோவெலும்பி னாபரணம் பூணுகைக்கோ
வெம்பணிமாலைக்கோபேய் வேலைக்கோ - சம்பந்த

௧௬௨. நல்லிடத்திற் சோதித்தாய் நம்போ லியரிருக்கு
மில்லறத்திற் கித்தனையு மேற்குமோ - வல்லதுமிவ்

௧௬௩. வாண்டா ரொருவர்க் ககப்படுவ ரோ[6]வல்லர்
[7] காண்டாயே யனறிந்தக் கள்வரே - வேண்டினாற்

---

௧௫௨. அம்பொற் கொடி - மங்கை. ஆடல் - விளையாடல்.

௧௫௩. அம்பு - நீர். போது அம்பு - மலர்ப்பாணம்.

௧௫௮. கற்றகலை - கற்றநூல்கள். கழன்ற கலை - ஆடை.

௧௫௯. காமிக்கை - விரும்புதல்.

௧௬௩. காண்டாய் - கண்டாய். வேண்டினால் - பிரார்த்தனையினால்.

(பி - ம்.) [1]'பணிந்தாள் புலனறிந்தாள்' [2]'அண்டவருமினி' [3]'விண்டவரும்' [4] 'மாதினிடத் தாரென்ன' [5]'மடவாளைக் கண்டனையே நெஞ்சங் கரைந்தாயோ' [6] 'அல்லல்' [7] 'காண்டாயெனுமிந்தக் கள்வரை'

௩௬௪. [1] சீரு ரரியுரத்துச் செங்கமல மங்கைக்கா
வாரூரி லேசென் றருளன்பு - [2]மாரூர

௩௬௫. ஞசைப் பரவைதனை யப்பரவை மங்கைமுன்னே
நேசத் துடனே நிகழ்த்தன்பும் - பாச

௩௬௬. வலைச்சேரி யிற்பிறந்த மங்கைக்கா வந்நா
ளலைக்கே வலைவீசு மன்புந் - தலைக்கொண்ட

௩௬௭. கங்கைதனை யேவிவருங் கம்பையினிலே போர்மங்கை
கொங்கை தழுவக் குழையன்பு - மிங்கே

௩௬௮. சகலகலை மங்கை தவம்புரிந்து போற்ற
வகில கலையருளு மன்பு - நிகரில்லாப்

௩௬௯. பாகொத்த செய்யமொழிப் பாண்டிவள மங்கையரை
யாகத்தி லேவைத் தருளன்பு - நீகருதி

௩௭0. மாதவத்தைச் [3]செய்தாலம் மங்கையர்போல் வாயென்றே
யாதரித்துத் தேற்று மளவிலே - சோதி

௩௭௧. விடங்கர் விடங்களித்தார் வேணியர்பொற் றிண்டே
ரடைந்த தயல்வீதிக் கப்பான் - மடந்தை

மடந்தை.

௩௭௨. கரியகுழற் கள்ளினத்தாள் கார்ப்புருவ நெற்றி
யரியதிரு விற்கோல மானாள் - வரிபரந்த

௩௭௩. காமர் விழியாலங் காட்டினா ளொசிகுமிழ்
மாமலரோ டெட்பூ வணத்தினாள் - சோமகலை

௩௭௪. நன்னிலவே யன்ன நகைமுல்லை வாயினாள்
கன்னமணி [4]வள்ளைக் கருகாதாள் - பன்னியபுள்

---

௩௬௪. ஆரூரன் - சுந்தரமூர்த்திநாயனார்.

௩௬௫. ஆசைப்பரவை - ஆசைக்கடல்.

௩௬௮. சகலகலை மங்கை - ஸரஸ்வதீ தேவி. ௩௭௧. விடம் - நீர்.

௩௭௨-௯. இக்கண்ணிகளில் கள்ளில், விற்கோலம் (கூவம்,) ஆலங்காடு, பூவணம், நன்னிலம், முல்லைவாயில், திருக்கருகாவூர், கூடல், வேணுபுரம், கமலாலயம், திருச்செங்கோடு, ஆலக்கோயில், வலஞ்சுழி, குறுக்கை, மாணிக்கநாகம் (திருவாட்போக்கி), அரம்பைவனம் (திருப்பைஞ்ஞீலி), திருமருகல், கஞ்சனூர், கச்சபாலயமென்னும் திருப்பதிகளின் பெயர்கள் தொனித்தல் காண்க.

௩௭௨. கள் இனம் - வண்டின் கூட்டம். விற்கோலம் - வில்லின் அழகு.

௩௭௩. ஆலம் - விடம். எட்பூவின் வண்ணத்தினாள். [வாயினாள்.

௩௭௪. நிலவு - சந்திரிகை. நகை - பல்; நகையாகிய முல்லையையுடைய

(பி - ம்.) 1 'சீரூர் பரிபுரத்து' 2 'ஓரூரன்' 3 'செய்துவரு மங்கையர்களாளென்றே' 4 'வள்ளைக்கருக்காதாள்'

௩எரு. சாற்றுங் களந்தனக்குச் சங்கநேர் கூடலாள்
போற்றுந்தோள் வேணு புரத்திளுள் - கோற்றொடிக்கை

௩எசு. மேவுகம லாலயத்தாள் [1]விம்முமூலைச் செங்கோட்டாள்
கோவுதர மாமாலக் கோயிலா - ளாவலா

௩எஎ. லுற்றுலகெ லாமுழுகு மூந்தி வலஞ்சுழியாள்
சிற்றிடை[2]நூ லாங்குறுக்கை சிந்திப்பாள் - வெற்றிசெறி

௩எஅ. வன்ன மணியல்குன் மாணிக்க நாகத்தா
[3] ளன்ன துடையி னரம்பையாள் - கன்னியர்கைக்

௩எகூ. கஞ்ச மிசையிற் [4]கணைக்கால் வராலினத்தாள்
பஞ்சடியி னூற்கச்ச பாலயத்தாள் - செஞ்சொலாள்

௩அo. பூணு மழகும் [5]புறப்பொருளுந் தன்னிழலிற்
காண வழகெறிக்குங் காந்தியாள் - வீணைமொழிப்

௩அக. பாங்கியரே [6]யானும் பணிந்துறங்கும் பாயலிலே
யீங்கொருவ ரென்கனவி லெய்தினு - ராங்கவரை

வினவிடை.

௩அஉ. யாரென்றே னென்றெரிய லாரென்று ரெத்தரோ
நீரென்றேன் சென்னியிலே நீரென்றார் - பாருமிவர்

௩அங. பந்தென்றே னின்குதிபூம் பந்தென்றார் வெண்ணீறோ
சந்தென்றேன் போய்வந்தேன் சந்தென்று - ரெந்தவூர்

௩அச. நாடென்றே னல்லுறவே நாடென்றார் கையிலே
யோடென்றேன் கோபமா யோடென்றார் - போடுமிது

௩அரு. கோதென்றே னீயதரங் கோதென்று ரிங்குண்டோ
வாதென்றே னுடினேன் வாதென்று - ரேதுசடைப்

௩அசு. புல்லென்றேன் வந்திறுகப் புல்லென்றார் நெஞ்சிவர்க்குக்
கல்லென்றே னேசமினிக் கல்லென்றார் - நல்லதிவர்

---

௩எரு. சங்கம் - சங்கு. சங்கம் நேர்கூடுதலையுடையாள். வேணுபுரம்-மூங்கிலின் உரு.

௩எசு. கோடு - யானைக்கொம்பு.

௩எஎ. ஆங்கு உறுக்கை - அங்கே கோபித்தலை.

௩எஅ. அரம்பை - வாழை. ௩அஉ. ஆர் - யாவர், ஆத்தி.

௩அங. பந்து - சுற்றம், கந்துகம். சந்து - சந்தனம், தூது.

(பி - ம்.) 1 'விம்பமுலை' 2 'நூலாங்கொறுக்கை சிந்திப்பாள்' 3 'பன்னு துடையின் பரம்பையாள்' 4 'கணைக்கான் மகரத்தாள்' 5 'புறம் பொருளும்' 6 'நாளும்'

௩௮௭. வம்பென்றே னின்முலைக்கே வம்பென்றா ரெண்ணியதை
னம்பென்றே னம்மையே நம்பென்றார் - கெம்புமிவர்

௩௮௮. வாக்கென்றே னாமனைய வாக்கென்றா ராருடனே
தாக்கென்றேன் கொங்கையொடு தாக்கென்றார்-[1]போக்கரென்

௩௮௯. போமென்றே னால்வேதம் போமென்றார் [2]பித்தரிவ
ரோமென்றே னோதுமறியோ மென்றார் -தாமரைக்கைத்

௩௯௦. தீயேதென் றேன்காமத் தீயென்றார் கண்விழித்தேன்
போயே மறைந்தார் புறம்போகா - ராயவரைச்

௩௯௧. சொல்லி யருளுமெனத் தோகையே கோகிலமே
மெல்லியலே கொம்பே விரைத்தேனே - வல்லியே

௩௯௨. பொன்னே யிளமானே பூவையே பொற்கிளியே
மின்னே யநங்கன் விசயமே - யன்னமே

௩௯௩. கேளுநன் கனவு கிடையாக் கனவுகா
[3] னாளுநந் துணையிறைவ னானான்காண் - காளனுடன்

௩௯௪. செங்கையத்தி பூசித்த தெய்வத் திருவுடம்புன்
கொங்கையத்தி பூசை தனைக் கொள்ளுங்காண் - சங்கரனை

௩௯௫. நற்கனிவாய்ப் பூசித்தா னன்கனிவாய் நீர்போலும்
பொற்கனிவாய் நீரும் புலப்படுங்காண் - கற்கனிந்து

௩௯௬. நல்குநா கத்தை நயந்தபிரான் [4]பேரருளான்
னல்குநா கத்தை யறியுங்காண் - செல்கோயிற்

௩௯௭. சேமநா விற்செய் சிலந்தியையாட் கொண்டவனான்
காமநா விற்குங் கனிவான்காண் - டாமதியா

௩௯௮. னென்று பொருள்விரிக்கு மெல்லைக்க ணெவ்வுலகுஞ்
சென்று பணியரனார் சிற்பரனார் - குன்றதனிற்

௩௯௯. சம்பாதி போற்றினார் சங்கார நீற்றினார்
பம்பா நதியார் பரகதியார் - [5]செம்பொற்

௪௦௦. சிலைவடத்தார் கஞ்சன் சிரமடர்த்தார் விண்ணோர்
தலைவடத்தா ரந்தகனைச் சாய்த்தா - ருலைவடர்த்தா

---

௩௮௭. நம்பு - இச்சை, விரும்பு. ௩௮௯. ஓம் - ஆம்.

௩௯௮. குன்று - திருக்கழுக்குன்றம்.

௩௯௯. பம்பாநதி - காஞ்சிபுரத்துள்ள நதிகளில் ஒன்று.

௪௦௦. சிலைவடம் - கல்லாலமரம்.

(பி - ம்.) [1]'போக்கரோ' [2]'பித்தரிவ, ரா மன்றே னோதுமறியாமென்றார்' [3]'ஆளுநந் துறையிறைவ ராளர்காண்' [4]'பேரருளால்' [5]'அம்பொற்'

ச0க. ரன்பர்க்குத் தோற்றுவா ரையர்கா ளத்தியா
ரின்பத் திருத்தேர்மே லெய்துதலு - முன்பிரவிற்

சO௨. கண்ணாரக் கண்ட கனவை வரக்கண்டாள்
பெண்ணு மவர்க்கிதுவே பேறென்று - ளெண்ணியவர்

சOங. தம்மைப்போற் செங்கைத் தளிர்முடிமேற் சூட்டினு
ளெம்மைக்கண் மஞ்சனநீ ராட்டினுள் - வெம்மைமனம்

சOச. பித்தேறி னுள்பெண் பினைத்தேறி னுளை[1]ம்பூங்
கொத்தேறி யங்கங் குழைந்திட்டாள் - புத்தரசை

சOரு. மீளத்தி யாணியீர் [2]வேதாத் தியானத்தீர்
காளத்தி யாரே கடிதென்று - டோளிற்

சOசு. கொதிகொ ளரவக் கொடும்பசிக்கு மாதர்
மதியை யிரையிடவோ வந்தீர் - புதிய

சOஎ. வுடம்போ டுயிரோ டுலாவுநரைப் பூண்ட
வடம்போல [3]வாக்கிடவோ வந்தீர் - படிந்து

சOஅ. பரவு மிருவர்விழி பற்றும லெங்கள்
வரிவிழியுங் கைக்கொளவோ வந்தீர் - கருதி

சOகூ. யெலிக்கு முடியிடுநீ ரின்றே யிவளைப்
புலிக்கு முடியிடவோ போந்தீர் - பலிக்கு

சகO. மொருமாலை வேண்டி யொருமாலைக் கஞ்சும்
பெருமாலை நீக்கீர் பிரானே - யுருகி

சகக. வருவார்க்குப் பேசி வரத்தருவீ ரன்றோ
திருவாய் மலரீர் சிவனே - துருவி

சக௨. யெரிகால் விடம்போ லிருள்வந்தா லென்ன
பரிகாரஞ் சொல்லீர் பரனே - யரிவளர்த்த

சகங. வெற்றிக் கணைக்காமன் வெஞ்[4]சாபப் போர்க்குநீர்
நெற்றிக் கணைக்காட்டி னில்லென்னீர் - முற்றும்

---

சOச. பினை-பின்னை. ஐம்பூங்கொத்து - ஐங்கணை. புத்தரசு-மன்மதன்.

சOஎ. பூண்டவடம் - என்புமாலை.

சOஅ. இருவர்: திருமாலும் கண்ணப்பநாயனாரும்.

சOகூ. எலியென்றது மாவலியாகவந்த எலியை. புல் இக்கு-புன்மையையுடைய கரும்புவில்.

சகO. மாலை - பூமாலை, மாலைக்காலம், மயக்கத்தை.

சகங. நெற்றிக்கண்ணை.

(பி - ம்.) 1‘அம்பின், கொத்தேறி’ 2‘வேதத் தியானத்தீர்’ 3‘ஆக்கவோ’ 4 ‘சாபம் போக்கினீர்’

௪௧௪. பொருளாள ராயிருந்தும் பூண்டவளை கொண்டீ
ரருளாள ரேசலமென் ஞளீர் - மருளானேன்

௪௧௫. பிள்ளைப் பழிபோதும் பெண்பழிவேண் டாமென்னுங்
கிள்ளைக் குரலிரக்கங் கேளாதே - தள்ளி

௪௧௬. நடந்தா ரிவளிங்கே [1]நன்மரம்போ னின்ருண்
மடந்தா [2]யெனவணைத்து மாஞர் - கடந்ததற்பின்

## அரிவை.

௪௧௭. ஆரமுத வண்ணத் தலங்காரத் தூரியத்தைச்
சீருடனே தோய்த்துத் திசைமுகத்தோன் - பாரிற்

௪௧௮. சதிராக வோவியத்தைச் சஞ்சரிக்கக் கீறு
[3] மதிரூப லேகை யரிவை - புதியவுருப்

௪௧௯. பத்தனையுந் தத்தமிலே யாபரணம் போலுடலுக்
கொத்[4]தழகு பொங்க வொழுகுவாள் - மெத்து

௪௨௦. மதுர விளந்தென்றன் மன்றலிளங் காவி
னிதழி விளமெல் லியலாள் - முதியபகி

௪௨௧. ரண்ட மலைய வகிலாண்ட முங்குலையக்
கண்ட வரிபிரமர் கண்மூடப் - பண்டைநா

௪௨௨. ளேரம் பனைப்பெற்ற ரேகிப் பலிக்காடும்
பேரந்த காரப் பெருங்குழலாள் - சூரஞ்சத்

௪௨௩. தாண்டும் விடைப்புனிதன் சங்கார தாண்டவத்திற்
பூண்ட பிநாகப் புருவத்தாள் - பாண்டரங்கன்

௪௨௪. [5] பூசலிலே முன்பு புவனமெல்லாஞ் சுட்டெரிக்கும்
பாசு பதமனைய பார்வையாள் - ஈசன்

௪௨௫. மிகைத்தபுரந் தூளாக வில்வளைத்துச் சற்றே
[6] நகைத்தநகை யன்ன நகையாள் - பகைத்தெண்

௪௨௬. பகட்டைத் திசையொதுக்கிப் பண்டையய னண்ட
முகட்டையிடித் தன்ன முலையாள் - வகுத்தகலை

௪௨௭. போதுசம யங்க ளுணராமற் குத்திபடும்
வாதுபொரு ளொத்த மருங்கினுள் - பூதலத்தி

---

௪௧௪. சலம் என் - தணியாகோபத்துக்குக் காரணம்யாது?

௪௨௨. பலிக்கு - சாம்பலின்கண். ௪௨௭. குத்தி - குஸ்திப்போர்.

(பி - ம்.) [1]'நன்மான்போல்' [2]'எனவணைத்தார்' [3]'அதிரூபரேகை' [4]'அழகு செய்ய' [5]'பூசலிடு முன்னே' [6]'நகைத்தமுகை'

௪௨அ. லாதாரச் சேடனுமஞ் சல்குலாள் கூர்மத்தைப்
பாதாளத் தேதுரத்தும் பாதத்தாண் - மேதினிமேற்

௪௨௯. கல்லா லடிபோற் கடவுளரு நான்முகனு
மெல்லாரு மேத்து மெழிலினாள் - பொல்லாக்

௪௩0. கறைபற்றி யீரெண் கலையோன் குறைய
வறுபத்து நாலுகலை [1]யார்ந்தா - ணிறைவுற்

௪௩௧. [2] றநங்கவதி காரியிருந் தங்கரங்க போகந்
தினங்கருதிச் செய்யச் சிறந்தா - ளினஞ்சூழ

௪௩௨. முன்னாட் செழுநிலா முற்றத் தரியணைமேற்
பொன்னாட்டி லிந்த்ராணி போலேறித் - தன்னைக்

௪௩௩. குறுகி யொருவிறலி கொண்டாடச் சாந்து
நறுவிரையும் பூமலரு நல்கி - விறலியே

௪௩௪. நாரியரை யாட்கொண்ட நாயகர்க்குள் ளேசிறந்த
பேரழகு நாயகரார் பேசென்ன - நேரிழையே

௪௩௫. தாயி லறம்புரிந்த தங்கைக்கு மாறாய
சேயிழையா னுண்மைதனைச் செப்புதுமோ - தூய

௪௩௬. முகமிழந்து தன்மனைவி மூக்கிழந்து மின்ன
மகமகிழ்வா னைச்சொல்ல லாமோ - மகமதிலே

௪௩௭. தேய்ந்தானைப் பல்லொடியச் சென்றானைப் பூங்குயிலாய்ப்
பாய்ந்தானைப் பேசிற் பழுதன்றோ - காய்ந்தளவி

௪௩அ. னீறாயி னானை நிறத்திலுதை பட்டானைக்
கூறான கையானைக் கூறுதுமோ - தேறி

௪௩௯. லருத்தியுள்ள பெண்ணுக்கு மாணுக்கு நாதன்
பெருத்த சிவனேகாண் பெண்ணே - கருத்துனக்கென்

---

௪௩0. ஈரெண் கலையோன் - சந்திரன். இம்மகளிர்க்குரிய கலைகள் அறுபத்துநான்கென்பதை, ம. னி. உ-ஆம் அடிக்குறிப்புரையாலுமுணர்க.

௪௩௧. அநங்கனுகிய அதிகாரி.

௪௩௨. முன்னாள் - திருத்தேர்ப்பவனியின் முதனாளில். [திருமால்.

௪௩௫. மாறானமை - மோகினியாகிவந்து தழுவினமை. சேயிழையான் -

௪௩௬. அகமகிழ்வான்-பிரமன். ௪௩௭. சந்திரன், சூரியன், இந்திரன்.

௪௩அ. மன்மதன், யமன், அக்கினி.

(பி - ம்.) 1 'ஆய்ந்தாள்' 2 'அநங்கனதி காரியிருந் தந்தரங்க போகந்'

சச0. சொல்லென்ற போதே சுடுதென்ற லேதென்று
எல்லென்ற பாவிக் ககப்பட்டாள் - கல்லால்

சுசக. விரவிதேர் வந்தாலு மெல்லியலீர் நம்மூர்க்
கிரவிதேர் வாராதிங் கென்றாள் - கரதலத்தி

சசஉ. லன்று [1]திருவிளையாட் டாடினாள் கண்புதைத்த
தின்று முளதோ விறைக்கென்றாள் - கொன்றைக்

சசந. கிணைவிழியின் முத்துகுத்தா ளெய்யாதே யென்று
கணைமதனைத் தாழுங் கதைபோ - லணைமேல்

சசச. விழுந்தா ளெழுந்[2]தஞ்சு வேதாவின் கற்பங்
கழிந்தாளிற் கங்குல் கழிந்தா . ளெழுந்தாள்பி

சசரு. னேனைக் கருங்குழலீ ரின்றைக்கெவ் வாறுபெரு
மானைப் பிடிக்க வகையென்றாள் - கானக்

சசசு. குழலிலே கண்ணிவைத்தாள் கொங்கையில்வா ரிட்டாள்
விழியை[3]வலை யாய்த்திரைய வீசினாள் - பொழுதுணர்ந்து

சசஎ. நின்றாள் வழிநோக்கி நிற்பா [4]ணிலையறியச்
சென்றாடி தீர்த்தன் சிராப்பளியான் - கன்றாப்பூ

சசஅ. ரொள்ளிய தாணு [5]வொருதாணு பாலாழிப்
பள்ள னயனெழுந்த பாகத்தான் - றள்ளித்தன்

சசகூ. குன்ற மிடந்தவனைக் கொல்லாமற் பாரிடந்த
பன்றி சபதம் [6]பரிகரித்தா - னன்றறியாப்

சரு0. பாணனிடத் தொன்றியருட் பாணனைக்காத் தான்வடநூற்
பாணனியாழ்ப் பாணன்பண் பாடினான் - சேணகரா

---

சசக. விரவி - விரவியவர்.

சசஉ. கண்புதைத்தது - உமாதேவியார் திருக்கண்புதைத்த திருவிளையாடல், இச்சரிதையை, காஞ்சிப். திருக்கண்புதைத்த படலத்தாலுணர்க.

சசரு - சு. பெருமான், குழல், கண்ணி, வார இவைகள் சிலேடை.

சசஅ. தாணு - நந்தி; ஸ்வாமியின் திருநாமம்; "கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே" என்பதனாலுமுணர்க; திருநா. தே. பாலாழிப பள்ளன் - பாற்கடலில் துயில்பவராகிய திருமால்.

சசகூ - ரு0. நன்றறியாப்பாணன் - ஏமநாதன். அருட்பாணன் - பாணபத்திரர். வடநூற்பாணன் - வடநூற்புலவர். யாழ்ப்பாணன் - திருநீலகண்டயாழ்ப்பாணர்.

(பி - ம்.) 1 'திருவிளையாட் டானநாள் கண்புதைப்பது' 2 'அஞ்சிவேதாவின்' 3 'வலை யாய்த்திரைய விட்டாள்' 4 'நிலையறிவான்' 5 'ஒருபாலன் பாலாழி' 6 பரிகரித்தான் மன்றேறி'

சருக. னப்பாலைக் கப்பாலா னப்பாலற் கேவலைவா
னிப்பால னண்டமிறுத் தெண்கையான் - [1]முப்பாலா

சருஉ. முத்தியான் முத்தியான் [2]மூத்தா வணமகிழ்வான்
மத்தியா னக்கதிரின் வைகுவான் - பத்தி

சருங. யரிச்சந் திரனை யருச்சுனனைத் தன்கண்
கரிச்ச பகீரதனைக் காத்தான் - றரிச்சு

சருச. மரிச்சவரை யென்று மரிப்பியா னண்ட
மரிச்சரிச்ச தூளே யணிவான் - விரிச்சிருவர்

சருரு. பாடுஞ் செவியான் பரத்தையடை யார்செவியா
ரூடுஞ் செவியா னருட்செவியான் - காடணுகிப்

சருசா. பன்னியர்கள் கூறை பறித்தான் பசுங்கனக
மின்னியநற் றேரேறி மேவினான் - முன்னிவனுந்

சருஎ. தானை கொடுநடந்து தாக்கினாள் காளத்தி
யானை வலையி லகப்படுமோ - வானமுய்ய

சருஅ. வெம்புநர கேசரியை வெள்ளுகிரி னுலள்ளுஞ்
சிம்பு ளொருவருக்குச் சிக்குமோ - வம்புதெரி

சருகூ. வெஞ்சாப வேடன் விழிபறித்தே [3]யுட்புகுத்தும்
பஞ்சா னனந்தான் பயப்படுமோ - கஞ்சநறும்

சசூo. பூவிற் புலிநகத்தன் பொற்கைநகத் தாலுறக்கு
மாவிற் புலியொருவர்க் கஞ்சுமோ - நாவிலிவள்

---

சருக. அப்பாலன் - திருவிரிஞ்சைத் தலத்திலிருந்த சிவசர்மாவென்னும் ஆதிசைவச்சிறுவன்; இவனுக்குச் சிவபெருமான் வனைந்தருளியதைத் திருவிரிஞ்சைப்புராணம், பாலனுக்குத் திருமுடிவனைத்த சருக்கத்தாலுணர்க.

சருக - உ. முப்பாலாம் முத்தி-சாலோகமுதலிய பதமுத்திகள்; முத்தி - பரமுத்தி.

சருங. 'தன் கண்கரிச்ச' என்றது தவத்தால் வருந்தியதைப் புலப்படுத்துகின்றது.

சருச. மரிச்சவரை - மரித்தவரை. இருவர் - கம்பளர், அச்சுவதரர்.

சருரு. பரத்தையடையார் செவியார்-முத்தியையடைவதற்கு உரிமையில்லாதவர்களால் ஜபிக்கப்படாதவர். செவி = செவ்வி - அழகு, சமயம். காடு - தேவதாருவனம்.

சருஎ. தானை - சேனை, ஆடை.

சசூo. பூவிற் புலி - தாமரைப்பூவிற்பொருந்திய பிரமதேவர். உறக்கும் - கிள்ளும். ஆவிற் புலி - சிவபெருமான்.

(பி - ம்.) [1]'முப்பாலான்' [2]'மூத்தா ளனைமகிழ்வான்': மூன்று திருவடிகளையுடைய பிருங்கிமுனிவரை மகிழ்பவர். [3]'உட்புகுத்தப்', 'உட்கொண்ட'

௪௬௧. பன்கலைகற் றுண்டோ பயமுறுத்தப் [1]போய்ப்பயந்தா
டன்கலையுந் தோற்று டரங்கித்தாள் - புன்கலைகள்

௪௬௨. போலே பெருமானும் புன்முறுவல் செய்துதேர்
மேலேக மற்றை விழாவீதிப் - பாலொருத்தி

## தெரிவை.

௪௬௩. யக்கமல வேதா வழகம்பு ராசியிலே
தக்க மதிமந் தராநாட்டி - மிக்க

௪௬௪. காணவடம் பூட்டிக் கலையாற் கடையத்
திருவவதா ரஞ்செய் தெரிவை - சுருதிப்பணி

௪௬௫. நங்கயிலைக் குன்று நறைக்காந் தளுமனைய
செங்களபக் கொங்கையாள் செங்கையா - ளிங்கிதவேள்

௪௬௬. [2] வில்லி னிவர்நாரி மென்கதலித் தண்டனைய
வல்லி யுரோமத்தாள் வாமத்தாள் - சில்பொழுதி

௪௬௭. லல்கு மிமையோ ரமுதுஞ் சிவனமுது
நல்குமத ரோட்டத்தா ணாட்டத்தாள் - புல்காமல்

௪௬௮. வண்டகலுஞ் சண்பகமு மாயோன் வலம்புரியுங்
கண்டனைய துண்டத்தாள் கண்டத்தாள் - வெண்டரளச்

௪௬௯. சோதிக் கழையெனவே [3]சூதக் குழையெனவே
சாத்திக்குந் தோளிணை டாளிணையாள் - சீதளித்த

௪௭௦. நீண்மண் டிலத்து நிலாவு மிருளும்போற்
கேழ்மந்த காசத்தாள் கேசத்தாள் - சூழ்மணியின்

௪௭௧. பைக்கொண்ட மாதனையும் பங்கயமு மென்றுலகோர்
கைக்கொண்ட தந்தத்தாள் கந்தத்தாள் - செய்க்குண்

௪௭௨. மடையோதி மப்பெடைக்கும் வஞ்சிக் கொடிக்கு
மிடையா நடையா ளிடையாள் - படைமதனூல்

௪௭௩. வாசித்தார் கொங்கைகளை வாசித்தார் கூந்தலுக்கு
வாசித்தார் கொய்பூ வனத்திலே - தூசினிடை

---

௪௬௧. உண்டோ - பயன் உண்டோ. தன் கலையும் - தனது ஆடையையும்.

௪௬௬. நாரி - வண்டு. வாமம் - தொடை.

௪௬௭. சிவனமுது - விடம். ௪௬௮. துண்டம் - மூக்கு.

௪௭௧. கந்தம்-மணம். ௪௭௨. இடையா - பின்னிடாத.

௪௭௩. கொங்கைகளை மணக்கச்செய்த மகளிர். வாசித்தார் = வாசிகைத் தார் - கோக்கும் மாலைகளுக்குரிய பூ.

(பி - ம்.) [1]'போய்ப்புகுந்தாள்' [2]'வில்லின் வரிநாரி' [3]'சூதத்தளிரெனவே'

சஎச. கண்டு கொடிகள் கடிது மரமேற
வண்டு விழியின் [1]மறைவெய்தத் - தொண்டையிதழ்

சஎரு. தன்னை யுறநோக்கித் தத்தை முகஞ்சிவப்பக்
கன்னி மயில்[2]வெருவிக் கண்பரப்ப - வன்னமுலை

சஎசா. வற்கண்டு கூட்டமிட [3]மஞ்சரிகள் கண்டனைய
சொற்கண்டு நைந்துகனி சோர்ந்துவிழ - நிற்குங்

சஎஎ. கிளைத்தோளைக் கண்டு கிளைவளைய மூரன்
முளைக்கே முலைகண் முகிழ்ப்ப - வளைக்கடகப்

சஎஅ. [4] பாணித் திரள்கண்டு பல்லவங்கள் கை[5]குலைப்ப
மாணிக்கப் பீடத்தில் வந்தேறி - நீணிலத்தி

சஎகூ. லஞ்ச மவற்றையெலா [6]மஞ்ச லெனவழைத்து
வஞ்ச வசந்தனைநீ வாவென்று - விஞ்சியவென்

சஅ0. ஞைச யுரைபோ யருட்கயிலை யார்க்கென்ன
மாசுணமுன் டஞ்சுவேன் மற்றென்னப் - பூசலிடுங்

சஅக. கோகிலத்தை யேகென்னக் கோகிலமு மும்பர்கோன்
மாகுயிலாய்ப் பட்ட வகைசொல்ல - மோகத்தை

சஅஉ. யிட்டமத னேபோ யிசையென்ன மற்றவனுஞ்
[7] துட்ட நயனஞ் சுடுமென்னக் - கிட்டிமால்

சஅந. வண்டு பகரென்ன வண்சிலந்தி நூல்பிணிக்கி
னண்டி விடுவிப்பா ராரென்னத் - தண்டலையிற்

சஅச. [8] பூவைகா ளன்றில்காள் போமென்ன வேடனுளன்
பாவையறி யாயோ பகரென்னக் - கோவித்து

சஅரு. மாங்குயிலின் மெய்கருக வண்டு பொறியுண்ண
[9] தேங்கன்றில் பூவை [10]சிறையெய்த - [11]வேங்கித்

சஅசா. துரத்து[12]மிளங் காற்றுழலச் சூறைகொளும் பஞ்ச
சரத்தனரு வாகச் சபித்துத் - திருத்திழையீர்

---

சஎசா. மஞ்சரிகள் கூட்டமிட.

சஎஎ. கிளை - மூங்கில். முலை - முல்லைக்கொடி.

சஎகூ. வசந்தன் - தென்றல்.

(பி - ம்.) 1 'மறையெய்த' 2 'வெரிநிற் கண்புதைப்ப' 3 'மஞ்சரியைக் கண்டளகம்' 4 'பாணித் தளிர் கண்டு' 5 'குலைய' 6 'அஞ்சலென நிறுத்தி' 7 'சுட்டநயனம்' 8 'பூவைகா ளன்பர்பாற்' 9 'தேங்கணத்திற் பூவை திரையெய்த' 10 'பூவை திரண்டேற' 11 'ஓங்கித்' 12 'இளங்கால் சுழல'

சஅஎ. பொல்லா மரத்தின் பொழிலைத் துறந்துபோய்க்
கல்லா லடியதனைக் காண்பேமோ - நல்லபணி

சஅஅ. மத்தகத்தின் மீதிலே மாணிக்க மிட்டவர்க்கு
[1] முத்தமிட நாமு முயல்வேமோ - பத்திநூல்

சஅகூ. கீரனை வைக்கொண்டு கேட்டார் தொடைநமது
கீரநா வைக்கொண்டு கேட்பேமோ - தாரணியி

சகூ0. லவ்வே தனைநினைந்தா ளையரே யாசையெனு
மிவ்வே தனைநினையீ ரென்பேமோ - செவ்வேயாய்

சகூக. மெச்சிமவான் றன்மகளார் வேந்தை மடலெழுதிப்
பச்சிமவா சற்படிந்து பார்ப்பேமோ - நிச்சயித்துக்

சகூஉ. காமருவு நீழற் [2]கரைமுகரி நீர்க்கனக
மாமணலிற் கூடல் வளைப்பேமோ - நாமெலாஞ்

சகூங. சொல்லீ ரெனவவருஞ் சோகமே னிப்பொழுதே
வல்லீ பவனி வருவரென - மெல்லைக்கண்

சகூச. வட்டக் குடையநந்த [3]மாமன் மகத்திமையோ
[4] ரிட்டத் தினைக்கெடுத்தாரென்றாட - முட்டத்தன்

சகூரு. [5] சீத விழியென்று சீர்ப்பதத்தை முன்பணியுஞ்
சோதி மலரைச் சுமப்பானும் - போதிலே

சகூசு. [6] தங்கித் தனது தலையென்று பிச்சைகொளுந்
[7] துங்கக் கலத்தைச் சுமப்பானுஞ் - [8]செங்கையிலே

சகூஎ. யாபரணந் தன்னை யருளிற் சுமப்பானுந்
தாபதரும் போற்றத் தடந்தேரிற் - பூபரண

சகூஅ. குண்டலத்தான் [9]சைலங் குடிகொண்டா னோர்மூன்று
மண்டலத்தான் மூவிரண்டு மண்டலத்தான் - [10]கண்ட

சஅஅ. மத்தகம் - தலை. முத்தமென்பது சிலேடை.
சஅகூ. கீரம்-கிளி   சகூ0. வேதனை - பிரமனை, துன்பம்.
சகூக. பச்சிமவாசல் - மேற்குவாயில்.   சகூஉ. கூடல் - கூடற்சுழி.
சகூரு. சுமப்பான் - திருமால்.   சகூசு. சுமப்பான் - பிரமன்.
சகூஎ - அ. பூபரண குண்டலம் - ஆதிசேடனாகிய குண்டலம்.
சகூஅ. சைலம் - ஸ்ரீசைலம்.

(பி - ம்.) 1 'முத்தமிட்டு' 2 'கனமுகரி' 3 'மாசிமகத்து' 4 'இட்டத்தினி தெடுத்தார்' 5'சீதவிழி யொன்றிடந்து சீர்ப்பதத்தி லேயணியுஞ்' 6 'தங்கி இடக்குந் தலை', 'தங்கிச் தனக்குத் தலையென்றே' 7 'துங்கக் கமலஞ் சுமப்பானும்' 8 'செங்கையினில்' 9 'சைவங்' 10 'கண்டச்'

௫௨. கடைக்கு விடயமன்றிக் கார்முதலை யென்று
விடைக்கு விடைகொடுக்கும் வேந்தன் - இடைக்குலத்துப்

௫௩. பூவையர் தாள்பணியப் போகாமல் விண்ணவர்க்குச்
சேவை கொடுத்தருளச் செல்கொடியான் - ருவிலா

௫௪. மாரூப வில்வேண் மலர்தூவக் கண்பார்த்துச்
சாரூபந் தந்தருளுந் தம்பிரான் - வீரப்

௫௫. புலிபோல வாட்டைப் புசிக்குமரா வுக்குஞ்
சலியா நடம்புரிந்த தாணு - வலியாரை

௫௬. மோது மிருமழுவன் முக்கால ஞற்கண்ணன்
வேதமைந்த ஞறுதலை மேவினோன் - காத

௫௭. லெழுசமைய னெட்டுலகு மொன்பது திக்கும்
பழுதகலின் பத்து நிதியும் - தொழவருள்வோன்

௫௮. தன்புய வெற்பிடத்துந் தாட்டா மரையிடத்து
மென்பணி கொள்ளு மிராமேசன் - அன்பர்

௫௯. திகைத்த வினையுமயன் சென்னியுஞ்சே திக்கு
நகத்தன் வராம நாதன் - சகற்பதியைப்

௬0. பூசித் திருநாளு நம்மையென்று போதித்தோன்
மாசித் திருநாள் வருநாளிற் - பாசத்தாற்

---

௫௨. விடயமன்று இக்கார்முதலை. விடை - திருமால், விடுத்தல்; "ஊரும் விடைகருடனாரவிடை கொடுத்தார்" திருவிடைமருதூருலா, ௩௫.

௫௨ - ௩. திருமால் கண்ணனாக அவதரித்தபொழுது இடைக்குல மகளிர்பாற் பயின்றமை இங்கே யறியற்பாலது.

௫௪. சாரூபம் - செத்த உருவம், ஸாரூபம். பூசித்தவனைக் கடைக்கணித்துச் சாரூபங் கொடுத்தருளினரென்பது மற்றொன்று. [பதஞ்சலி.

௫௫. புலி - வ்யாக்கிரபாதர். ஆட்டை - ஆட்டினை, நடனத்தை. அரா-

௫௬-௭. ஒருமழு, இருகால், முக்கண், நால்வேதம், ஐந்துதலை, ஆறுசமயம், ஏழுலகம், எட்டுத்திக்கு, ஒன்பதுநிதி யென்வே இருத்தற் குரியவைகள் வேறு தொகைப்பொருள்களாகத் தொனிக்கும்படி இக்கண்ணிகளிற் கூறியிருத்தல் வியக்கற்பாலது; இருமழு - பெரியமழு. முக்காலன்-மூன்று காலங்களையுடையவர். ஆற்கண்ணன்-ஆலமரத்தின்கீழே எழுந்தருளியிருப்பவர். வேதமைந்தன்-வேதத்தை அருளிச்செய்த வலியையுடையவர்; மைந்து - வலி. ஆறு - ஆகாய கங்கை. எழு - எழுகின்ற. நெட்டுலகம் - நீண்ட உலகங்களையும். ஒன்பது உதிக்கும் - ஒன்பதாக உதிக்கப்பெற்ற. பழுதுஅகல் இன்பத்து நிதி - பழுதகன்ற இன்பத்தைச் செய்யும்நிதி. உலகையும் நிதியையும் அருள்வோன்.

௫௮. என்பணி - என்னுடைய பணிவிடை, என்பாகிய அணி.

௫௯. நகம் - மலை, உகிர். சகற்பதி - திருமால்.

௬0. பூசித்திரு, ஏவல். பாசம் - அன்பு.

௬௧. பொற்கொடி மார்பிற் பொருந்தும் விடைக்கொடியா
நற்கொடி யேறு நலங்கண்டு - சொற்கொடிபோல்

௬௨. வாழும் பருவத வர்த்தனியுந் தானுமுல
கேழும் பரவ வெழுந்தருளி - ஆழியருள்

௬௩. காபாலிக் கென்றுகட்டு வித்த ரகுநாத
பூபாலன் மண்டபத்திற் போந்திருந்து - மாபாரச்

௬௪. செஞ்சடை யன்றித் திருப்புயஞ்சே ராளென்னு
நஞ்சடை வார்த்தைமிக நாணடைய - மஞ்சுதவழ்ந்

௬௫. தேறுகுழற் கங்கையா ளங்தைபுயஞ் சேர்வதுபோற்
கூறு மபிடேகங் கொண்டருளி - ஈறு

௬௬. புரியாடை யோரெட்டும் புல்லாடை யொன்றுங்
கரியாடை யொன்றுங் களைந்து - துரைராசன்

௬௭. தென்னன் விசய ரகுநாத சேதுபதி
கன்ன னருள்பொற் கலைபுனைந்து - பின்னை

௬௮. இறைப்பொழுதுங் கங்கைதனை யீசைகா ணமன்
மறைப்பதெனப் பொன்மகுடம் வைத்துக் - கறைக்கண்டன்

௬௯. காதி லிருவரிசை காந்திருந்து கேட்பனபோற்
கோதி லரவக் குழைசாத்திச் - சாதலற

---

௬௧. பொற்கொடி-திருமகள்; பொன்னுண். சொல்-புகழ். "புட்கொடி யைக் கொண்டு போறிக்கொடிமார் பிற்கொண்மலரக், கட்கொடி யேற்றி" திருவிடைமருதூருலா, ௧௪௩.

௬௨. பருவதவர்த்தனி - அம்பிகையின் திருநாமம். ஆழி - சக்கரம்.

௬௩. ரகுநாதபூபாலன் - ரகுநாதசேதுபதியார்.

௬௨ - ௩. இவரைத் திருமாலாக உட்கொண்டு 'ஆழியருள்' என்றார்.

௬௬. ஓர் எட்டு - எட்டுத்திசைகள். புல் ஆடை-புலித்தோலாகிய ஆடை.

௬௫ - ௬. மூவகையாடைகளும் குற்றமுடையனவென்று நீக்கப்பட்டன வென்பது குறிப்புப்பொருள்.

௬௭. விசயரகுநாதசேதுபதி - இந்நூலாசிரியர் காலத்திருந்த அரசர்; "தருத்தேர் விசயரகுநாதன் றங்கத், திருத்தேர் வடமுகுர்த்தஞ் செய்ய" என்பர் பின்னும்; ௧௩௮.

௬௮. இறைப்பொழுதும் - சிறிதளவும். ஈசை - உமாதேவியார்.

௬௯. இருவர் - கம்பளர், அசுவதர ரென்பவர்கள். கேட்பனபோல் - கேட்பனவாகிய பாம்புகள்போல். பாம்பு இசையை அறிதற்குரியது; "காதி ரண்டுபேர் கண்டோ ரிரண்டுபே, ரேதிலராய்க் காணு ரிரண்டுபேர் - பேதை முலை, உண்ணு ரிரண்டுபே ரோங்குபுலி யூரருக்குப், பெண்ணுனை பேரிரண்டு பேர்" தில்லைக்கலம்பகம், ௮.

எ0. அண்டர்க்கா வுண்டநஞ்சி லாரமுத மூ முதல்போற்
கண்டத்தின் முத்துவடங் கட்டிநீஇச் - சண்டன்போய்

எக. எட்டித் தொடுமுன் னிறுகச் சிவக்கொழுந்தைக்
கட்டிப் பிடித்தோன் கரம்போல - வட்டத்

எஉ. தினமணிக்கே காந்திதரும் செம்மல் புயத்தி
லினமணிக் கேயூர மிட்டுக் - கனல்விழியைத்

எங. தோண்டும் விரலேந் தொழுவங்க சூரியன்போற்
காண்டகுமா ணிக்கக் கடகமிட்டு - வேண்டிவளர்

எச. மெய்யாண் முலைத்தழும்பை வேணியாள் காணுமற்
கையாள் பதக்கங் கவினுவித்துப் - பொய்யுலகில்

எரு. தாயுதர பந்தனத்தைத் தள்ளுந் தனிமுதலுக்
காயுதர பந்தனமு மாங்கமைத்துத் - தேயம்

எசு. பரித்தாளும் வாணன் பலசதங்கை யிட்ட
திருத்தாளி னூபுரமுஞ் சேர்த்துத் - தரித்த

திருச்சாந்தணிதல்.

எஎ. திருமா லொருபாலுந் தேவியொரு பாலும்
இருபாலுங் கைக்கொண்ட தென்னத் - திருமேனி

எஅ. ஆகாய மென்ன வகிலாண்ட மாந்தருவிற்
சேகாய வண்ணந் தெரிப்பதெனப் - பாகாய

எகூ. சானகி செங்கைத் தளிரும் பொருந்துதிரு
மேனி நிறங்கன்றி விட்டதெனக் - கானகத்தின்

---

எ0. சண்டன் - யமன். எக. கட்டிப்பிடித்தோன் - மார்க்கண்டேயர்.

எஉ-ங. தினமணி - சூரியன். கனல் விழியை - கனலுகின்றகண்ணை; "பகன்முமரைக்கண் கெடக் கடந்தோன்" திருக்கோவையார், கஅச.

எச. மெய்யாள் - உமாதேவியார். வேணியாள் - கங்கை. கை - அலங்காரம்.

எரு. உதரபந்தனம் - ஓர் அணி.

எசு. வாணன் - வாணாசுரன். பல சதம் கை - பலநூறாகிய கைகள்; ஆயிரம் கைகளையுடையவனாகிய வாணன் சிவார்ச்சனை செய்துவந்தவன். வாணன் சதங்கையணிகள் பலவற்றையணிந்த திருவடியென்பதும் ஒன்று.

எஎ. "ஒருபாதி மால்கொள மற்றொரு பாதி யுமைகொளவே, இருபாதியையு மிழந்தான் புராரி" தனிப்பாடல்.

எஅ. சேகு - வயிரம்.

எகூ. இராமநாதரது திருமேனி சீதையால் அமைக்கப்பெற்றது; சேது புராணம், இராமனருச்சனை, அரு-க0சு.

அ0. மண்டிப் பொருவிசயன் மன்னைப் பிடிபிடிக்கக்
கண்டத்தி னஞ்சு கலந்ததெனக் - கொண்டலார்

அக. தெள்ளுஞ் சிவத்தியானஞ் செய்போ திரண்டுருவு
முள்ளும் புறமு மொளிர்வதெனக் - கிள்ளைவளர்

அஉ. கையிற் கருப்பணிவாள் காத லெனுநீலப்
பையுட் பொதிந்த பவளமென - ஐயமறத்

அங. தூய சிவஞானந் தோன்று நெஞ்சவர்க்கு
மாயை நிழலின் மறைந்ததென - நேய

அச. மருக்கூந்தன் மங்கைநிறம் வாஞ்சித்தா ரென்னத்
திருச்சாந் திலேபனமுஞ் செய்து - விரைச்சாந்தாற்

அரு. சந்திரனில் வாழுந் தடந்தா மரைக்கண்ணன்
வந்தெதிர் நிற்கும் வடிவென்ன - முந்திய

அசு. விம்பப் பிரதிவிம்ப வேதாந்த நீதியெனப்
பைம்பொனிலைக் கண்ணாடி பார்த்தருளி - வெம்போரில்

அஎ. வானிற் பறக்கு மதின்மூன் றெரியுமெய்ய
மேனிற்கும் பொன்மேரு வில்லென்ன - வானத்து

அஅ. முந்திய விந்திரவின் மூன்றி லுமைநிறமும்
எந்தைநிற முங்கண் டிரண்டொளிக்க - நிந்தையிலா

அகூ. மற்றொருபொன் வில்லை வளைத்துத் தரித்ததெனப்
பொற்றிரு வாசி பொலிந்தோங்கக் - குற்றமறு

கூ0. சீரா தனமான சிங்கா தனத்திலிருந்
தாரா தனைகொண் டருளியபின் - யாரும்

அ0. மன்னை - கழுத்து; வழக்கு. கொண்டலார் - மேகம்போல்வாராகிய இராமர்.

அஉ. கையிற் கரும்பு அணிவாள் - உமாதேவியார்.

அச. இலேபனம் - பூச்சு. சாந்தால் - திருச்சாந்து அணிந்தமையால்; அது கருமையுடையது.

அரு. சந்திரமண்டலத்தில் திருமால் எழுந்தருளியிருக்கின்றனர்; இதனை, "ஆற்குழை யோலரா வோவாயா பாடி யருமனையோ, பாற்கடலோ திங்களோ தஙகு மாவம் பலபலவா,மாற்கமு மாகினை ஞர்மாதை நாதர் வளங்கொள் பம்பை, மேரகரைக் கோயிலகொண டார்புரஞ் சீறிய வங்கணைக்கே" என்பதனாலுணர்க; திருவாமாத்தூர்க்கலம்பகம, கக.

அஅ. இரண்டு - பச்சைநிறமும் சிவப்புநிறமும்.

கூ0 - கூக. யாரும் நந்தியால் அடங்கிநிற்க. சடங்கம் - ஆறு அங்கம்.

௬௯௧. மடங்கலெனு நந்தியான் மாயோ னடக்கு
நெடுங்கடல் போலடங்கி நிற்கச் - சடங்குசேர்

௬௯௨. நான்மறையு முத்தமிழு நற்பே ரிரண்டுடையோ
னான்மறையு முன்னே நுவன்ற நற்பின் - மேன்முறையே

௬௯௩. வாட்டிவிடுஞ் சென்மம் வரும்வழியைத் தாளிட்டுப்
பூட்டிவிடுஞ் சேதுப் புராணமுங் - கேட்டருளி

௬௯௪. மெய்ந்நூற் றுறையின் விதிவழியே பூசிக்கும்
ஐந்நூற்றுப் பன்னிருவ ராரியரும் - இந்நிலத்திற்

௬௯௫. றேற்றுமலை யத்தனையுஞ் சேதுபந்த மீதுகுடி
யேற்றுலக நாதமுனி யென்போனுங் - கூற்றதிர

௬௯௬. ஆர்க்குங் கடறூர்த் தழிவி றிருநகரஞ்
சேர்க்கு மிராவாடு தேசிகனும் - நீர்க்கடலில்

௬௯௭. ஆராமங் கோயில்குள மற்புதமாக் கற்பித்த
மாராம நாத வரமுனியும் - சீராமர்

௬௯௮. மெய்யம் பலமாக வீற்றிருப்பார்க் கேற்றபணி
செய்யம் பலவாண தேசிகனும் - ஐயன்

௬௯௯. சிவராச தாநியுடன் தேவையையொப் பாக்குந்
தவராம நாதமுனி தானும் - புவனேசற்

௭௦௦. காதவன்வாழ் கோபுரங்க ளட்டபந்த மாதிகள்செய்
மாதவனும் வேதவன மாமுனியும் - சீதைபுணர்

---

௬௯௧. மாயோன் - இராமர்; இவர் கடலோசையை யடக்கினமை, இந் நூல், ௧௪-ஆம் கண்ணிக்குறிப்பா லுணரலாகும்.

௬௯௨. முத்தமிழ் - தேவாரங்கள். பேரிரண்டென்றது, தென்னவன் பிரமராயர், மாணிக்கவாசகரென்பவற்றை. நான்முறை - திருவாசகம்.

௬௯௩. தாள் - திறவுகோல்; "இன்பப் புதாத திறக்குந் தாளுடைய மூர்த்தி" சீவக. ௧௫௪௯.

௬௯௫. சேது, சேதுபந்தமெனவும் சேதுவந்தமெனவும் வழங்கும்.

௬௯௭. ஆராமம் - சோலை.

௬௯௮. மெய்-மனத்தை; "வடிவங் கண்டே மெய்யொருப் பட்டதில்லை" திருவால. ௩௦: ௩௧.

௬௯௯. சிவராசதானி - ஸ்ரீகாசி.

௭௦௦. 'ஆதிகள்' என்றதனால், வேதவன முனிவனால் வைப்பிக்கப்பெற்ற வேதவனச்சோலையும் கொள்ளப்படும்; "மாதவனும் வேதவன மாமுனிவன் வைப்பித்த, வேதவனத் தண்டலைமேமன் கூந்தலாள்" ௨௨௫.

௧௦௧. மேகஞ் சொரிந்ததினு மிக்காக நித்தமபி
டேகஞ் சொரிந்து நினைப்பூசை - யாகந்தின்

௧௦௨. மைவார் வளையும் வனமுலையும் பெற்றோர்க்குத்
திவ்யா கமப்படியே செய்விக்கும் - சைவ

௧௦௩. சிகாமணி யான சிதம்பர நாத
மகாமுனியு மாமெழுவர் வந்து - நகரிகளக்

௧௦௪. கன்னன் முதலோர் கலாநேர்ந்து வைச்சேவப்
பண்ணுதல்போற் செய்யும் பணிவிடையும் - மண்ணுறுலகங்

௧௦௫. காத்தருளுஞ் சேதுபதி கட்டளையைச் சட்டமிட
வாய்த்தசொக்க நாத மாமுனிவன் - கீர்த்தியுடன்

௧௦௬. நம்பர் திருப்பணிக ளெட்டாலுஞ் செய்தனவுஞ்
சம்பு திருச்செவியிற் சாத்தியபின் - அம்பொற்

௧௦௭. திருவாழி தாங்கலாற் சேரும் வடத்தாற்
பரிவான பீதாம் பரத்தாற் - றிருவென்னு

௧௦௮. மாது பதியுமவன் மாமகுட மும்போலுஞ்
சேதுபதி வைத்ததிருத் தேரேறிக் - காதலிதேர்

௧௦௯. பின்னூரச் சண்டன்றேர் பின்னூர மைந்தர்தேர்
முன்னூர நீருரு மூனூரில - மன்னிறையோன்

௧௧௦. ஆதித்தேர் பானு மழகுக்குத் தோற்றிந்தச்
சோதித்தேர் தன்னைச் சுமப்பதெனை - வீதிக்

௧௧௧. கெழுந்தருளும் போதி லிமையோர்கள் வெள்ளங்
கொழுந்து படர்ந்துவருங் கூட்டம் - தொழுந்தகைய

௧௧௨. வள்ளலுடன் முன்வந்த வானரங்க ளோரொரு
வெள்ள மெனக்கலித்து மீண்டதெனா - வொள்ளிழையார்

௧௧௩. அன்று தனிப்போ யரன்விழிக்குத் தோற்றமத
னின்று படைக்கூட்ட மிட்டதெனச் - சென்றோடிப்

---

௧௦௨. வளை - வளைதழும்பு. பெற்றமை, காஞ்சிப்புராணம், தழுவக்குழைந்த படலத்தாலுணரலாகும்; ௩௫௬ - ஆம் கண்ணியைப்பார்க்க.

௧௦௭ - ௮. திருமாலுக்கும் திருத்தேருக்கும் சிலேடை: ஆழி - சக்கரம்; உருளை. வடம் - ஆலிலை, தேர்வடம். திருவென்னு மாதுபதி - திருமால். திருமால்போலும் தேர்.

௧௧௦. ஆதித்தேர் - பூமி.

ககச. பேதைமையால் வாலி பிதாமிதித்த பூமிதனை
மேதினியோ ரெல்லா மிதித்ததெனக் - காதலுமை

ககரு. ஏடலர் தாரா னிளனுக் கிடுஞ்சாப
மாடவர்க் கெல்லாமுன் டானதெனை - நீடுரடா

ககசு. தீர்த்த மொருசுகத்தின் சென்மந் துடைத்ததமைகேட்
டார்த்தசுக மெல்லா மடைந்ததெனப் - பார்த்திருந்து

ககஎ. சானகியை யீன்ற தலந்தைவெல்லப் பூவையரை
யேனை யிடமெல்லா மீன்றதெனை - மானெலாங்

ககஅ. கோவங்க மானக குத்தனை வஞ்சித்த
பாவங் கழுவப் படாந்ததெனக் - மகாலிங்கிகாள்

ககக. தென்கடனீ ருண்ணச் செலும்போ தீமூத
மின்களையெல லாங்கரையில் விட்டதெனத் - தன்கிளைபோற்

கஉ0. கொச்சை மயிலெல்லாங் கூட் டமிட்டு வெறபீன்ற
பச்சை மயிலைவந்து பாரப்பதென - அச்சுதனும்

கஉக. மூவர் பணிந்த முதற்றலமென் றுங்கவாதம்
பூவையரெல் லாப்பணியப் போந்ததெனச் - சேவை தனிற்

கஉஉ. பிந்தாது சூழவனப் பேடவர்கைத் தாமரையில்
வந்தாடல் போற்சா மரையாடத் - துந்துபி

கஉங. சல்லரி தக்கை தடாரிமுர சம்பேரி
கல்லவடங் காகளங் கல்லென்னச் - சொல்லரிய

கஉச. வெண்கவிகை யான்மறைந்து விண்ணிறம் வெண்ணிறமாய
வண்கவிசொ னீலநிற மாறுடக் - கண்கவொனும்

---

ககச. வாலிப்தா - 'ஸ்யோகூஜனை' எனபவ . மிதித்த ஆடவாகள் உடனே மகளிர் வடிவமடையும் இடமொன்றை மிதித்து அவன் பெண்வடிவமடைந் தான்; கூர்மபுராணம், அகத்தியர் இராவணனைமாபுரைத்தத்தியாயம்,ககக.

ககரு. சாபம் - பெண்வடிவமடைக வென்றது.

ககசு. சுகம் - கிளி, சுகமுனிவர்.

ககஎ. ஈன்றதலம் - பூமியின் ஒரு பகுதி; ஏனையிடம் - பூமியிலுள்ள மற்றையிடங்கள்.

ககஅ. கோ - அரசன். வஞ்சித்தடாவமென்றது, மாரீசன் மான் வடிவங்கொண்டுவந்து மயககியதை. ககக. சீமூதம் - மேகங்கள். தன், சாதி

கஉக. மூவர் - இராமர், பலராமர், கண்ணபிரான். [யொருமை.

கஉஉ. 'சூழ்' என்றதற்கு எழுவாய் ககஉ-ஆம் கண்ணியிலுள்ள 'ஒள்ளி ழையார்' என்றது.

கஉச. ஆகாயம் நீலநிறமுடைய தென்பது கவிகளின் மதம்.

கஉரு. பொங்கலர் பூத்தகடம் போன்றமடவார்களட்ட
மங்கல மேந்தி மகிழ்வேந்தப் - பங்கயனும்

கஉசு. மாலும் பறவைகளில் வந்தேற வாசையிரு
நாலும் புரப்போர் நரர்விலங்கு - மேலேற

கஉஎ. எட்டிய கோள்க ளெழுபத் தொருகுதிரை
கட்டிய தேர்கள் கடிதேறக் - கிட்டுவினை

கஉஅ. பாறுமிரு நால்வசுவும் பன்னொ ருருத்திரரு
மேறு விமான மினிதேறச் - சீறயிலை

கஉகூ. எள்ளு மிருகண் ணெழுமடவார் நான்மூன்று
புள்ளும் விலங்கும் பொலிந்தேறக் - கிள்ளைமொழி

கநo. நேயத் திருமா னிலமா னிளம்பிடிமான்
காயத் திரிமான் கலைமானும் - தூயோர்

கநக. எழுவர்நதி மாத ரெழுமுனிவர் மாதர்
வழுவி லெழுவரர மாதர் - பழித்தீர்

கநஉ. வசுமாத ரெண்மர் மகிதல மாதி
யசமான மாதரோ ரெண்மர் - இசைசிறந்தோன்

கநந. கன்னியர் நால்வர் கடவுட் கலாநாதன்
பன்னியர் மூவொன் பதுமாதர் - சென்னியச

கநச. மானவர் பெற்ற வறுபது மாதருட
னேனையரு மொய்த்தீண்டவெம் மருங்கும் - மேனுளிற்

கநரு. கோவ மொடுங்கரா வுண்ட குலமைந்தர்
மூவரையும் வாழ்வித்த மூவர்களுந் - தேவருக்கும்

---

கஉசு. ஆசை-திசைகள். நரவாகனமுடையோர்-நிருதியும் குபேரனும்.

கஉஎ. சூரியன் முதலிய ஒன்பது கோள்களின் தேர்களிற்கட்டிய குதிரைகள், முறையே, எ, கo, அ, அ, அ, கo, அ, சு, சு ஆதலின், 'எழுபத்தொருகுதிரை' என்றார்; கூர்மபுராணம், ஆதவர்கதிர்ச்சிறப்புரைத்த. கக-ந.

கஉகூ. எழுமடவார் - சத்தமாதர்கள்; நால்விலங்கும் மூன்றுபுள்ளுமென்க; எதிர்நிரனிறை.

கநo. இளம்பிடிமான் - இந்திராணி.

கநக. எழுவர் அரமாதர் - அரம்பை முதலிய எழுவர்; 'எழுவார மாதர்' என்றும் படித்தற்கிடமுண்டு.

கநந. சூரியன் மனைவிகள் நால்வர் சஞ்ஞை, இராக்கினி, பிரபை, சாயையென்பார்; கூர்மபுராணம், சூரியன் மரபுரைத்த. ந - சு.

கநந - ச. சென்னி அசமானவர் - தக்கர்.

கநரு. கோவம் ஒடுங்கு அரா, கோவமொடும் கராவெனப் பிரித்துப்

௧௩௬. பேருலகத் தோர்க்கும் பிரம்படி யுண்டாக்கும்
ஓரிருவர் தாமு முடன்போத - நீரோடப்

௧௩௭. பண்ணியங் கொள்ளாது பார்முழுதுங் கொண்டாடப்
புண்ணியங் கொள்ளும் புகழாளன் - விண்ணோர்

௧௩௮. தருத்தேர் விசய ரகுநாதன் றங்கத்
திருத்தேர் வடமு தூர்த்தஞ் செய்யப் - பெருத்த

௧௩௯. மறுகு கடலாக மன்பதை வெள்ள
முறுகு கரைபுரண்டு மோத - நிறைவயிரக்

## குழாங்கள்.

௧௪௦. கன்னிலத்து மின்னுசந்த்ர காந்த வணிநிலத்தும்
பொன்னிலத்தும் வைசயந்திப் பொன்னிலத்தும் - அன்னம்

௧௪௧. உலாநிலத்து மேனிலத்து மோர்நிலத்து மில்லா
நிலாநிலத்தும் வெள்ளி நிலத்தும் - கலாநிதியும்

௧௪௨. தாரா தரமு முதவுந் தரளமின்கள்
ஓரா யிரங்கோடி யுற்றவென - நேரிழையார்

௧௪௩. காதலுட னேறிடுவார் கைக்கடகந் தம்மையே
பாத கடகமெனப் பார்த்தணிவார் - கீதாதி

௧௪௪. பாடகத்தின் மீதே பரிந்தணியுங் கண்டசரம்
பாடகத்தின் மீதே பரிந்தணிவார் - நாடி

௧௪௫. இதங்கொண் மலர்க்கை யிருகை யிடத்தே
சதங்கை தெரியத் தரிப்பார் - விதங்கொண்ட

௧௪௬. காலாழி கையாழி பாசக் கடகணிவார்
மாலாழி நீந்த மடுக்குவார் - நாவிடமு

---

பொருள் கொள்க ; கரா - முதலை. வாழ்வித்தமூவர் - திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் முதலிய மூவர்.

௧௩௬. ஓரிருவர் - திருவாதவூரடிகள், அரிமர்த்தனபாண்டியர்.

௧௩௮. தருத்தேர் - கற்பகமரம் ஆராயப்பெற்ற.

௧௪௦. வைசயந்தி - பெரியகொடி கட்டப்பெற்றதும் வீட்டின்முன்புறத் [துள்ளதுமான மாளிகை.

௧௪௧. கலாநிதி - சந்திரன்.

௧௪௨. நிரனிறை.

௧௪௪. பாடகம் - பாடுகின்ற இடமாகிய கழுத்து; ஒருகாலணி.

௧௪௫. சதங்கை - ஓரணி. இரண்டுகைகளில் நூறுகைகளைத் தரிப்பாரென்றும் ஒன்று தோற்றும்.

கசஎ. மொய்த்திடுவார் மார்பு முறுகு முலைதாங்கி
யெய்த்திடுவார் வேர்வை யிறைத்திடுவார் - தத்தம்

கசஅ. இடைகளையுந் தேடுவா ரெல்லோர் மடியும்
உடைகளையுஞ் சோதித் துடைவார் - விடையோன்

கசகூ. கனிவாயுந் தம்பிதழுங் கைவிரலாற் கூட்டத்
தனியாமை யாலே தவிப்பார் - இனிஇந்தப்

கருo. பெண்களையு மாண்களையும் பேசுந் திரைக்கரத்தாற்
கண்களைமூ டாதோ கடலென்பார் - எண்கொள்ளும்

கருக. எம்முடைய கொங்கை யிணைகளுக்கு மீசரே
உம்முடைய வில்லங்க மோயாதோ - எம்ம

கருஉ. திரவியமா நாணையழித் தீருமது நாணை
வரையறை யாப்பதுக்கி வைத்தீர் - நிரைவளையார்

கருரு. கைவளையை நீக்கினீர் கண்ணுதலீ ரும்முடைய
பெய்வளையை நீக்கப் பெறுவீரே - ஐயரே

கருச. கொள்ளை விடமமுதாக் கொண்டீரே நீரெமக்குத்
தெள்ளமுத நஞ்சமெனச் செய்தீரே - துள்ளி

கருரு. விழமதனை வென்றீரே விண்பழுத்த வெள்ளைப்
பழமதனை வெல்லப் படாதோ - முழுமுதலீர்

கருசா. என்றென் றிரங்க விளநீ ரையுமுலையு
மொன்றென் றிருக்கு மொருபேதை - என்றும்

## பேதை.

கருஎ. திருமகளார் சிந்தை தெளிய விளைய
மருமகளார் பெற்றெடுத்த வஞ்சி - விரக

கருஅ. வசப்படுவோர்க் கெல்லா மதன்கரும்பு போலக்
கசப்பு விளையாக் கரும்பு - பசப்புவிளை

கருகூ. தன்போல் விளங்கச் சரக்காமன் றேரிழுத்துத்
துன்ப முறாத சுகப்பிள்ளை - பின்பொற்றை

கருக. வில்லங்கம் - வில்லின் அங்கம்; வில் - மேரு; வேறுபாட்டுக் குண மென்பது மொருபொருள்; "சுமப்ப தென்கொ னீயிந்த, வில்லங்க மாம்பிறையை வெங்கை புரத்தரனே" வெங் கைக்கலம்பகம், ருக.

கருஉ. 'உமது நாண்' என்றது, பாம்பை.

கருரு. பெய்வளை - அம்பிகை. கருரு. வெள்ளைப்பழம் - சந்திரன்.

கருஎ. இளைய மருமகளார் - இரதி.

கருகூ. 'தன்' என்றது மன்மதன் குதிரையாகிய கிளியை.

௧௬௦. மாவிற் றனித்திருந்து மால்கொண்டோர் பேய்கொள்ளக்
கூவத் தெரியாக் குயிற்பேடு - நாவிப்

௧௬௧. படியேழு மோடிப் படரச் சிறிதே
கொடியோடுங் காமக் கொழுந்து - துடியோடிப்

௧௬௨. போரம்பஞ் செய்யும் புகழ்க்காம வேடிருநாட்
காரம்பஞ் செய்யுமங்கு ரார்ப்பணம் - சேருங்

௧௬௩. களவுங் கொலையுங் கவுரியமுஞ் சூதும்
விளையுந் தமோகுண வித்து - வெளியதிரு

௧௬௪. நீற்றொளி பொங்குதிரு நீலகண்ட யாழ்ப்பாணர்
ஏற்றினு மேற்றுத வின்னிசை - ஆற்றலால்

௧௬௫. என்முடியென் றெண்ணி யிருப்பினு முன்முடியாப்
பொன்முடிபோற் கூடாத பூமுடியாள் - முன்னேன்

௧௬௬. தலந்துதிக்கு மப்பருக்குச் சாக்கியர் பாலிற்
கலந்தளித்த நஞ்சனைய கண்ணாள் - நிலந்துதிக்கும்

௧௬௭. மைநாகம் போய்மறைத்த மைம்பொற் சிகரம்போன்
மைநாக நீரின் மறைந்ததுபோற் - கைநாக

௧௬௮. பங்கன் சடைமுடிமேற் பண்டா யிரமுகத்துக்
கங்கை யொளித்திருந்த காட்சிபோற் - செங்கனியின்

௧௬௯. சார்பி லொளித்திருந்த தக்ககன்போன் மிக்கமணி
மார்பி லொளித்த வனமுலையாள் - ஊரனுக்குப்

௧௭௦. பைம்பொன் றிருமுருகன் பூண்டியி லேபறிபோஞ் [யாள்
செம்பொனெனப் போய்மீண்ட சீறெயிற்றாள் - கொம்பனை

௧௭௧. செய்யதொரு சித்திரத்திற் றீட்டுஞ் செழுங்கிளியைக்
கையி லழைத்தழைத்துக் கன்னுவாள் - மெய்யுறுகண்

௧௭௨. ணாடி நிழலுக் கமுதூட்டு வாளதுவுங்
கூடவமு தூட்டக் குனிந்துண்பாள் - நீடுதிரை

---

௧௬௨. போர் அம்பு அஞ்சு எய்யும்.

௧௬௩. கவுரியம் - க்ரௌரியம்; குரூரத்தன்மை.

௧௬௬. சாக்கியர்-ஜைனர்; திருவாலவாயுடையார் திருவிளை. ௩௮: ௫௦.

௧௬௭-௮. மைநாகம் - சேடன். கைநாக பங்கன் - சிவபெருமான்.

௧௬௮. செங்கனி - காசிபனென்பவன் பரீக்ஷித்துவுக்குக் கொடுத்த [இலங்கைக்கனி.

௧௬௯. ஊரன் - சுந்தரமூர்த்திநாயனார்.

௧௭௩. மட்டித் தெடுத்த மணற்சோற்றைத் தானெடுக்க
எட்டிக் கடலை யிறைத்திடுவாள் - கிட்டிய

௧௭௪. மாதவிப் பந்தர் மணப்பந்த ராவாவிச்
சீதளச்செந் தாமரையே தீயாகப் - பேதுருக்

௧௭௫. கிஞ்சுக பத்திரமே கிட்டுஞ் சிருக்காக
வஞ்சுகங்கண் மந்திரஞ்சொ லந்தணரா - நெஞ்சுகந்த

௧௭௬. புன்னை யரும்பு பொரியாகப் பூந்தேற
னன்னர்ச் சொரியு நறுநெய்யா - முன்னரிள

௧௭௭. வண்ட லயர்ந்த மணற்சோறு நல்விருந்தாக்
கொண்ட முரசங் குரைகடலாத் - தண்டலையில்

௧௭௮. தன்பாவை யான தமனியப் பாவைதனக்
கன்பா மணஞ்செ யமையத்துத் - தென்பூமி

௧௭௯. வாழ வருங்கந்த மாதனத்தைப் பொன்மேருத்
தாழவரல் போலுந் தடந்தேர்மேற் - சூழத்

௧௮0. தனுக்கோடி நீங்கு தனுக்கோடியான் வந்தான்
மனுக்கோடி யேழுடையான் வந்தான் - எனைக்காக்கும்

௧௮௧. மூவா முதல்வந்தான் முப்பத்து முக்கோடி
தேவாதி போற்றுஞ் சிவன்வந்தான் - மேவவரும்

௧௮௨. பாலாழி தூணியாக் கொண்ட பரன்வந்தான்
நீலாழி யிலவாழ் நிதிவந்தான் - மேலோர்கள்

௧௮௩. நந்தா வரராம நாத னெதிர்வந்தான்
வந்தா னென்றூதும் வலம்புரியும் - துந்துபியும்

௧௮௪. பின்னத் தொனியான பேரிப் பெருந்தொனியுஞ்
சின்னத் தொனியுஞ் செவிதூர்ப்ப - அன்னை

௧௮௫. எழுவது கண்டெழுந்தா ளேழையர் பின்போய்த்
தொழுவது கண்டு தொழுதாள் - முழுவதும்

---

௧௭௩. மட்டித்து - கழன்று, வீசி. [ஓமஞ்செய்வதற்குரிய ஒருகருவி.

௧௭௫. கிஞ்சுக பத்திரம் - முள்ளுமுருங்கைப் பூவின்மடல். சிருக்கு -

௧௮0. தனுக்கோடி - கோடி உடம்புகள், ஒரு தீர்த்தம். மனுக்கோடி

ஏழ் - ஸப்தகோடிமகாமந்திரம்.

௧௮௨. நீலாழி - கரியகடல்; நீல் - நீலம்; முதற்குறை; சேதுஉள்ளகடல்.

௧௮௪. சின்னம் - ஒருவாத்தியம். இதிற் பேரொலி சிறியவொலியென்

பதுமொன்று.

கஅசு. பாதாதி கேசமெலாம் பாவை தரிசித்து
வேதாதி கேசவனை மேம்பட்டாள் - பேதைமற்

கஅஎ. றொன்றினையும் வேண்டாம லும்பர்கோ னங்கைமான்
கன்றினை வேண்டிக் கரைந்தழுதாள் - நின்றினையு

கஅஅ. மன்னே யுமைவிழியென் றம்மாறு மம்மானைத்
தன்னேயத் தாலே தரித்ததுகாண் - பின்னவனும்

கஅகூ. தேற்றுமிள மான்கன்றைச் சென்னிப் பிறைக்கொழுந்தில்
ஏற்றி விடுவதினு மிச்சைகாண் - கூற்றுவன்வே

ககூ0. ராணி யறுகை யபேட்சித் தவர்சாத்தும்
வேணி யறுகையது மேயுங்காண் - மாணிழையாய்

ககூக. பெம்மா னமரர் பெருமானம் மான்கோமா
னெம்மானம் மானையுனக் கீயுமோ - சும்மாது

ககூஉ. கண்ணருவி யோடக் கரைந்தழுவ தேனெனுமுன்
விண்ணருவி யோடுந்தேர் வேறகலப் - பெண்ணெதிரே

ககூங. வந்த விசையமதன் வாளியின் வாய்க்குவிருந்
திந்த விசையடையா தென்றகல - வந்த

ககூச. குதம்பை ததும்புங் குழையா ளகன்றாள்
பெதும்பை யொருத்திகிளிப் பிள்ளை - பதங்கண்டு

பெதும்பை.

ககூரு. துச்ச மதனன் றொடுக்குங்காற் றேட்சரமுங்
கைச்சரமு மாகாக் கடிமுல்லை - அச்சமற

---

கஅசு. வேதாதி - பிரமர். இவர் மேம்பட்டமைக்குக் காரணம், அடிமுடியைத் தரிசித்தது.

கஅஎ. நின்று இனையும்.

கஅஅ. ‘அனனே’ என்பதுமுதலியன தாயின்கூற்று. உமைவிழியென்று - உமைவிழி போல்வதென்று. அம்மானும் - சிவபெருமானும்.

ககூ0. ஆணி அறுகை - ஆணிவேர் அறுதல். வேணி அறுகை - சடையிலுள்ள அறுகம்புல்லை. [பரிநரி. சக.

ககூக. சும்மாது - சும்மா; “சும்மாது சிரந்தூக்கி” திருவிளையாடல்,

ககூஉ. ஏன் எனும் முன-என்னவென்று தாய் சொல்லுமுன். அருவி - அருபத்தையுடையார்; இராமநாதர்.

ககூங. விசயம் - வெற்றி. இந்தவிசை - இந்தமுறை.

ககூச. பதம் - மலரும்பருவம், விரும்பும் பருவம்.

ககூரு. துச்சம் - இழிவு.

கககசு. நீளவரு நாளத்தி னேற்று முகந்தோற்றி
நாளே மலரு நளினமலர் - வேளே

கககஎ. வெடிக்குமலர் மேற்றுயை விட்டு நடந்து
படிக்கு மடவன்னப் பார்ப்புந் - துடித்தோடித்

கககஅ. தாவுமதன் றேர்முன் போ தாய்கூவந் தான்காவிற்
கூவு மதுரக் குயிற்பிள்ளை - பூவுலகிற்

கககக. செல்லார் திருமருகற் றிங்களூர் வெவ்விடம்போற்
கொல்லாமன் மீண்டுய்யுங் கூர்விழியாள் - சொல்லும்

உ00. பெருந்தாளம் வேண்டாத பிள்ளையார்க் கீசன்
றருந்தாளம் போலுந் தனத்தாள் - வருந்திமிய

உ0க. பேதமற வாகீசர் பெற்ற சிவபதம்போற்
கோதையர் கூட்டுங் குழலினாள் - சோதிசேர்

உ0உ. பொற்கண்ட மான புதுயமணி முற்றத்துக்
கற்கண்டு கொண்டு கரைகண்டு - சர்க்கரையாற்

உ0ங. பாத்தி பரத்திப பசுந்தேன் றடங்கொண்டு
வார்த்து வளர்த்தசிறு மாதவிக்குப் - பூத்தறியாத்

உ0ச. தன்போ லிளங்கரும்பு மன்மைபொரு நாள்கொம்பாப்
பொன்போலும் வருந்திக்கட்ட போதகத்தில் - இன்ப

உ0ரு. நலஞ்செய்யுங் கங்கை நதிவந்து நித்தம்
வலஞ்செய்யச் செய்யும் வழிபோல - நிலம்பதிய

உ0சு. வண்டில் பதியு மணித்தேரி லெங்கைதவரக்
கண்டில் கடந்தாள் கடிதடைந்தாள் - கொண்டல்போய்

உ0எ. முன்னம் பணிந்த முளரித் திருப்பதத்தை
மின்னும் பணிந்ததுபோன் மின்பணிந்தாள் - சென்னிமே

---

கககசு. வேளை - காலம்.

கககஎ. வெடிக்கும் மலர் - அலருகிறது; "அலர்ந்தி வெடிமுல்லை" தனிப் [பாடல்.

கககக. திருமருகலில் திருஞானசம்பந்தமூர்த்திநாயனாராலும், திங்களூரில் திருநாவுக்கரசுநாயனாராலும் விடங்கள் தம்வேகங்குறைந்தமை இங்கே அறியற்பாலது.

உ00. பிள்ளையார் - திருஞானசம்பந்தர்.

உ0க. வாகீசர், திலகவதியாரால் சைவசமயத்தைச்சார்ந்து பேறுபெற்றமை இங்கே அறியற்பாலது.

உ0உ. கண்டம் - துண்டம். உ0சு. வண்டில் - தேருருளை; வழக்கு.

உ0எ. கொண்டல் - இராமர், மேகம்.

உ0அ. லாறுபிறை தோற்று மழகு மொருவேளை
நூறுவிழி தோற்று நுதலழகும் - கூறரிய

உ0கூ. வெண்டிசையுங் கொண்ட விடையழகு மேழுலகுங்
கொண்ட சிலையின் குனிப்பழகும் - கொண்டுவரு

உகo. மம்புயத்து லொன்றையொளித் தாயன் றனைவேடன்
றம்பியெனச் செய்த சரணழகும் - கொம்பனையாள்

உகக. கண்டவளுங் காணு தவளுமாய்ப் பேராசை
கொண்டுங் கொளாதுமெதிர் கும்பிட்டாள் - அண்டர்கோன்

உகஉ. வேற்றோர் மறுகடைந்தான் வில்வே டொடைமடக்கித்
தோற்றா னெனும்பேர் துலக்கினனை - சாற்றும்

மங்கை.

உகங. திருப்பிறந்த நாட்பிறந்த தெள்ளமுதத் தாலே
யுருப்பிறந்த மங்கை யொருத்தி - தருப்பிறந்த

உகச. அண்ட மனையு மகிலமுமஞ் சுங்காள
கண்ட மனைய கருங்குழலாள் - தொண்டருடை

உகரு. அன்பிறை நீங்கா வடியான் முடிமேல்வாழ்
வன்பிறை போல்விளங்கும் வாணுதலாள் - என்பிறவிப்

உகசு. பேரூசல் மாற்றும் பிரானோ டுமையாடுஞ்
சீரூசல் போலுஞ் செழுங்குழையாள் - ஆரூரிற்

உகள. கோன்கன் றினையாளுங் கோமான் கரத்தேந்து
மான்கன் றனைய வரிவிழியாள் - தான்கன்ற

---

உ0அ. ஆறு பிறை - ஆறும் பிறையும். நூறு விழி - அழித்த கண். ஆறுபிறை, நூறுகண்களுடன இதல் வேறும்பொருள்.

உ0கூ. சிலையின் குனிப்பு - வில்லைப்போன்ற புருவங்களின் வளைவு, "குனித்த புருவமும்" தேவாரம்.

உகo. ஆயன் - திருமால். வேடன் - கண்ணப்பர். ஆயனை வேடனுடைய தம்பியாகச் செய்ததென்பது இதிற் குறிப்புப் பொருள்; திருமால் சிவபிரான் திருவடியிற் கண்சாத்தியது இங்கே அறியத்தக்கது.

உகஉ. தோற்றான் - தோல்வியுற்றான், கண்ணுக்குப் புலப்பட்டான்.

உகங. தரு பிறந்த - கற்பகம் தங்கப்பெற்ற.

உகச. அண்ட மனையும் - அண்டமாகிய இடமும்.

உகரு. அன்பு இறையளவும் நீங்காத.

உகள. கோன்கன்றென்றது மனுநீதிச்சோழருடைய குமாரராகிய வீதிவிடங்கரை; "சழக்கன்று கழுவாய் வேறே தகச்செய லாகின் செய்கை, வழக்

௨௧௮. மைபோற்றுங் கண்ணுமையாள் வாட்டந் திருத்துமரன்
கைபோற் சிவந்த கனிவாயாள் - வையமெலாம்

௨௧௯. ஈன்றவரை யீன்றகுறி யீதென்னப் பச்சுடம்பு
தோன்றிய வேய்போலுந் தோளினாள் - ஆன்றபுகழ்ச்

௨௨௦. சேதுவிலுஞ் செம்பொன் வரையிலுஞ் சேர்கந்த
மாதனங்கள் போலும் வனமுலையாள் - ஓதியபொன்

௨௨௧. னுடமருங் கங்கை நதிமுடிக்கார் கைப்பிடித்த
மாடமரு கம்போன் மருங்குலாள் - நாடு

௨௨௨. மதிக்கு மகத்தியனார் வாவிவந்த வேழத்
துதிக்கை யனைய குறடையாள் - மதுக்கொன்றைப்

௨௨௩. பைந்தா மரைவணங்கிப் பச்சைமா லர்ச்சிந்த
செந்தா மரையனைய சீறடியாள் - முந்தியதோர்

௨௨௪. தென்னிலங்கை நாடியாச் சேதுவரா மாவலியாப்
பொன்னிலங்கு நற்சிகரம் பூண்முலையாத் - தன்னையுணர்

௨௨௫. மாதவனும் வேதவன மாமுனிவன் வைப்பித்த
வேதவனத் தண்டலைமென் கூந்தலா - மோதாழிப்

௨௨௬. பீடுறுநட் டேவைபெறும் பொன்னொடியுந் தானுமா
வாடுதல்போற் பொற்பாக நடிக்குங்கால் - நீடாழி

௨௨௭. திண்கயி லாசமனஞ் செய்வோன் பணிந்தேத்தும்
வண்கயி லாச மனமுவந்த தான் - கண்ணகன்

---

கன்று தவாதி பெண்ணு மந்திர நூரைகொள் ளாதான், குழக்கன்று நிமித்தந் தன்சீர்க் குலத்தாரு மருகாதா யுள்ளா, மழக்கன்று தபத்தே நூர்ந்த மனுவளித்தது சோணாடு" பட்டீச்சுரப்புராணம், திருநாடு, ௨.

௨௧௯. ஈன்றார் - சிவபெருமான்; அவர் திருநெல்வேலியில் மூங்கிலடியில் முளைத்தருளினமை இங்கே அறியற்பாலது.

௨௨௦. மேருவின் தென்பாலும் கந்தமாதனமென்று ஒருமலையுண்டு; கந்தபுராணம், அண்டகோச. ௩௧.

௨௨௧. நாடு அமரும். மாடமருகம் - பெரிய உடுக்கை.

௨௨௨. அகத்தியனார் வாவி - அகத்திய தீர்த்தம்; ௧௭ - ஆம் கண்ணிக் குறிப்பைப் பார்க்க.

௨௨௩. பைந்தாமரை - பசியமாலையையுடைய சிவபெருமானை.

௨௨௫. வேதவனத்தண்டலை - வேதவனமுனிவன் வைப்பித்த சோலை; ௪௦௦ - ஆம் கண்ணிக்குறிப்பைப்பார்க்க.

௨௨௬. கண் - இடம்.

௨௨௭. திண் கையில் ஆசமனஞ் செய்வோன் - அகத்தியமுனிவர்.

உஉஅ. கருப்பங் கடக்குமொரு காதற் கரும்பின்
மிகுபங் கடக்குதிரு மெய்யான் - தகைதீர்

உஉகூ. பராம நாதனையும் பாலித் தருள்வோன்
வராம நாதன் மகிழ்ந்து - சுரர்சூழ

உ௩0. ஆதித்த னம்பொற் குடைமேற் குடையாகச்
சோதித்தன் பொற்றேரிற் றோன்றுதலும் - மோதும்

உ௩க. பரவையிரச் சின்ன பரிசறிரா தென்ன
வுரவை யிரச்சின்ன மூத - விரைவெழுந்து

உ௩உ. தென்ன னுடையாளஞ் சேருந் திருவிழியா
ளன்ன நடையா ளமலன்றோர் - முன்னின்

உ௩௩. றளியன்னங் காணாத வொண்முடியை மற்றோர்
களியன்னங் கண்டதுபோற் கண்டாள் - கிளிதான்

உ௩ச. திடமான்முன் காணாத் திருவடியை மற்றோர்
மடமா னெதிர்காணு மாபோல் - நடமாடும்

உ௩ரு. பொன்னடியைக் கண்டு புகழ்ந்தா டிருவழகை
முன்னடியி னின்று முகந்துண்டாள் - பின்னை

உ௩சு. மதனம் படாதோ வரிக்குயிலி னோசை
விதனம் படாதோ விளம்பீர் - முதனம்பி

உ௩எ. வந்தவளை முன்ன மதுரையினிற் போய்விற்ற
தந்த வளையுமக்குத் தந்தவளை - நொந்தவளை

உ௩அ. நாணுங் கலையு நலனுங் கலனுமருந்
தாணுங் கவர்ந்ததுமங் கொண்ணுமோ - வேணுமால்

---

உஉஅ. கருபம் - திசை. காதற்கரும்பு - உமாதேவியார். மிகு பங்கு [அடக்கும்.

உஉகூ. பராம் அநாதரையும்.

உ௩க. பரவை இரைச்சு-கடல்முழக்கம்; இரைச்சு, வழக்கு. வயிரச்சின்னம் - வயிரமழுத்திய சின்னம்.

உ௩உ. பாண்டியருடைய அடையாளம் மீன்.

உ௩௩. அன்னம் - பிரமதேவராகிய அன்னப்புள்.

உ௩ச. மால் - திருமால். உ௩ரு. முன்னடி - அடிமுன்.

உ௩சு. மதன் அம்பு அடாதோ. ஓசையால். விதனம் - வியஸனம். படாதோ - உண்டாகாதோ. [தந்தத்தாலாகிய வளையல்கள்.

உ௩எ. 'வந்தவள்' என்றது, தன்னைப் படர்க்கையாக்கி. தந்த வளை -

உ௩அ. வேணும் - வேண்டும்; "வேணுமாகில் வேணுமன்றி விரகெனக் கழன்றுதான், நாணுமாகில்" வில்லி. பாரதம். சூதுபோர். கசுரு.

உஙகூ. அந்தத் திருவணையி லன்பா விருக்கின்றீ
ரிந்தத் திருவணையி னேமோ - சிந்தை

உசo. திகைத்தகன்று போல்வாளைச் சேர்ந்தருளீ ரென்ன
நகைத்தகன்று தேர்மே னடந்தான் - பகைத்திருந்த

உசக. சேக்கை யகன்ற செழுங்குயின் மீண்டுவரிற்
காக்கையுங் காக்கை கருதுமோ - தாக்குங்

உசஉ. கணைமேற் கிடத்தக் கருதுவாள் போற்பூ
வணைமேற் கிடத்திறு ளன்னே - கணையால்

உசங. தொடர்ந்துபொருங் காமனுக்குத் தோட்டுணையாய் வந்த
மடந்தை யொருத்திமலர் மங்கை - அடைந்தவருக்

உசச. கீவினி லேந்தருவா மேகாம் பரநாதர்
மாவினில் வாழும் வரிக்குயில் - ஓவா

உசரு. திடைமருதூர் மேயார்க் கினிய நிழலாந்
தடமருதில் வாழுமிளந் தத்தை – பொடியாடிப்

உசகூ. பால்வரையா மேனிப் பரமன் வரையான
மால்வரையில் வாழுமட மஞ்ஞை - நால்வரையாள்

உசஎ. கூடற் குருமணிதன் கூட முளைத்தெழுந்த
வாடற் கடம்பி னமர்பூவை - நாடும்

உசஅ. இணையிலி தேவை யிராம னடைத்த
வணையில் விளையாடு மன்னம் - பணியவெழில்

உசகூ. காட்டுஞ் செருத்தணியிற் காலத் தலர்குவளை
யேட்டி லிருக்கு மிளஞ்சுரும்பு - நாட்டும்

---

உஙகூ. இந்தத்திருவானவள் அணைந்தால்.

உசo. திகைத்த கன்று - திகைப்புற்ற மான்கன்று.

உசக. காக்கை கருதுமோ - காத்தலை நினையுமோ.

உசரு. கிள்ளை மருதமரத்திலிருத்தற்குரியது ; "வாழ்மருத வாழ்க்கை மதித்துறவு கொள்ளவந்த, கேழ்கிளர்செந் தார்ப்பசுங் கிள்ளையென" திருவிடை மருதூருலா, உருரு.

உசச - ரு. மாங்குயில், மருதக்கிள்ளை யென்பன வழக்கு.

உசகூ. பால் வரையா - வெண்மை நீங்காத. மால்வரை - கைலை; கந்த மாதனமுமாம். மயில், குறிஞ்சிக்கருப்பொருள்.

உசஎ. ஆடற் கடம்பு - வெற்றியையுடைய கடம்பமரம். பூவை - நாக ணவாய்ப்புள்; கடம்புக் குரியது பூவை.

உசகூ. செருத்தணி - திருத்தணிகைமலை. காலத்து - முக்காலங்களி லும். அம்மலையிலுள்ள ஒரு சுனையில், காலை உச்சி மாலை ஆகிய மூன்று

உ௫௦. மகோததி முத்த மணிப்பவளக் கோடு
சகோதர வாஞ்சை தரித்து - முகோதய

உ௫௧. மாமதியில் வந்து மணியித ழூக்கருகே
தாமதியா நின்றனைய தந்தத்தாள் - காமனையாள்

உ௫௨. அத்த னுமையவளுக் காக விரட்டைமுடி
வைத்த தனைய வனமுலையாள் - மத்தகசம்

உ௫௩. என்னப் படைத்த விளம்பிடி யானைநடை
தன்னைப் பழித்த தனிநடையாள் - தான்னும்

உ௫௪. அறல்போலுங் கூந்தற் கடற்சோலை நல்குந்
திறைபோன் மலர்கொய்பச் சென்றாள் - நறைகள்

உ௫௫. துடிபோலு மெல்லிடையாள் சொல்லுக்குத் தோற்றுக்
குடிபோவ தென்னக் குறிக்கப் - படியளிகள்

உ௫௬. பின்னின் றிரங்கப் பிணைமலர் கொய்யுங்காற்
பொன்னின்ற வானுலகும் பூவுலகும் - முன்னின்

உ௫௭. றொளிர்மணித் தேரேறி யும்பர் பெருமான்
கிளர்மணி வீதிவரல் கேட்டாள் - தளரும்

உ௫௮. இடையென்று மெண்ணு ளிறுக்கியுடுத் தானு
முடையென்று நில்லாதென் றோராள் - தடையொன்றும்

உ௫௯. இல்லா தவர்போ லெழுந்தா ளிரண்டிருளும்
வெல்லா தவர்போலு மெய்வடிவும் - சொல்லாத

உசா௦. சந்திர சேகரமுந் தானு முமையவளு
மிந்திர சாப மெனுமழகும் - அந்தக்

உசா௧. கரும்புயல் வாழ்காள கண்டமுங் கங்கை
விரும்பி வளர்சடில மின்னும் - இரும்புவனி

---

காலங்களிலும் கருங்குவளை மலருமென்பர்; கந்தபுராணம், வள்ளியம்மை.
உ௨௨. ஏடு - இதழ்.

உ௫௧. தாமதித்தல் - தங்கல்; வழக்கு.

உ௫௩. படைத்ததனி நடையாளென்க; "படியினெடுங்கிரி யனையமதங் கொடு பதறிடடந்திடு மின்னாரே", "நடையுமிந் திரவேழ மிருநையின திரதாரு நயனமிந் திரநீலமே" அருணைக்கலம்பகம், ௪௦, ௫௮.

உ௫௮. உடையானது என்றும் நில்லாது.

உ௫௯. இரண்டிருள் - அகவிருள், புறவிருள்.

உசா௧. வாழ், உவமவுருபு.

உசுஉ. ஆதார மெய்யெல்லா மாகாய மென்பதனைக்
காதா லறிந்தவள்கண் ணுலறிந்தாள் - சோதி

உசுஙு. இழந்தா ளெழுகடலி னெண்மடங்கு காம
முழந்தாள் சிலரின் றுரைத்தாள் - தழைந்தலர்ந்த

உசுச. குற்றமறு கொன்றைக் குழகன் கடைக்கணித்து
மற்றமறு கொன்றை மருவினான் - பொற்றபொறிக்

உசுரு. கோலத்து வண்டுதேன் கூட்டுண்ட பூமாலை
போலத் துவண்டு பொருமினாள் - சோலை

உசுசு. வருகாக வன்புள் வளர்த்ததுயில் கூவச்
சருகாக மெய்யுலர்ந்து சாய்ந்தாள் - அருகே

உசுஎ. மிகுந்த வரைமுலையார் மேவ விழியுட்
புகுந்தவரை யுட்கொண்டு போனாள் - தகுந்தவரைச்

அரிவை.

உசுஅ. சாதக ராக்கியந்தச் சாதகரைத் தான்வளர்த்த
மாதக ராக்க வருமரிவை - தாதுநிறை

உசுகூ. போது விரிகமலப் போதுபங்க முற்றதென்று
சேதுவில் வாழுந் திருமடந்தை - வேதத்

உஎ0. திறைவன் மணிநாவை யெச்சிலிது வென்று
மறைபயில் தேவையில்வாழ் வாணி - குறைதோன்ற

உஎக. வாசவன் மேனி வடுப்பட்ட தென்றிரா
மேசுரம் வாழவந்த விந்திராணி - மாசிலா

உஎஉ. அத்தனுக் கோடி யருந்தனுவீந் தோனையகன்
றித்தனுக் கோடிவந்த வின்பரதி - நெய்த்திருண்ட

உருக - சுஉ. ஸ்வாமியின் திருமேனியை ஆகாயமென்றதற்கேற்பச் சூரியன்முதலிய பொருள்கள் இவற்றிற்கூறப்பெற்றிருத்தல் காண்க.

உசுச. கொன்றைக் குழகன் - கொன்றைப் பூவையணிந்த இளமைப் பருவத்தை யுடையார். மற்ற மறுகு - வேறு வீதி. [துவட்சியுற்று.

உசுரு. கோலத்து வண்டு - அழகையுடைய வண்டுகள். துவண்டு -

உசுசு. காக வன்புள் - காக்கை. [தவரை - தக்க தவமுடையோரை.

உசுஎ. மிகுந்த வரை - மிக்கமலை. புகுந்தவர் - இராமநாதர். தகும்

உசுஅ. சாதகர் - உதவிசெய்பவர்கள். மா தகர்-பெரிய ஆட்டுக்கிடாய்.

உசுகூ. பங்கம் - சேறு, பழுது. உஎ0. இறைவன் - பிரமர்.

உஎஉ. அத்தனுக்கு - சிவபெருமானுக்கு. ஓடி அரிய உடம்பை ஈந்தோன் - மன்மதன்.

உ௭௩. கூந்தற் கருமணலுங் கோவா நகைமுத்துங்
காந்தி மதிமுகமுங் கட்கயலும் - வாய்ந்தகனி

உ௭௪. மூன்றையும் வென்ற மொழியமுத முங்காட்டித்
தோன்று மனையைத் துலக்குவாள் - தோன்றுத்

உ௭௫. திறலிக்கு வேளுக்குச் செங்கோல் கொடுப்பாள்
விறலிக்கு நோக்கருளும் வேளை - மறலிக்குக்

உ௭௬. கண்ணான் மகுடங் கவிக்குங் கனிமொழியைப்
பண்ணார் விறலி பணிந்திருந்தாள் - எண்ணிய

உ௭௭. மூவேழ் நரம்பு முறையே குரன்முதலாப்
பாவே ழிசையும் பயில்வித்துப் - பூவை

உ௭௮. முகநீ ரிலங்க முளரியோ ணுதி
சுகனீருத் தெய்வந் தொழுது - மிகவும்

உ௭௯. இறும்பூ தெனச்சங் கிசையாதி யாகக்
குறும்பூ ழிசையிறுவாய்க் கூட்டிப் - பெறும்பாடல்

உ௮௦. எண்ணூற் றுறையி னிசைவாணர் கொண்டாடப்
பண்ணூற் றொருமூன்றும் பாடுங்காற் - கண்ணனவன்

உ௮௧. எய்தறுபத் தாறு யிரந்தெய்வ யாண்டுதவஞ்
செய்து வரம்பெற்ற சீர்பாடி - வையமுடன்

உ௮௨. கால முழுதழியக் கண்ணுதலைத் தாடேடி
ஞால முழுத நகைபாடி - மாலையாத்

உ௮௩. தோளிற் கிடந்த தொகைபாடிக் கண்மலரைத்
தாளிற் கிடந்த தகைபாடித் - தோளில்

உ௮௪. உதித்தமை பாடி யொருசூல நாவிற்
பதித்தமை வித்தமையும் பாடித் - துதித்துச்

---

உ௭௪. 'தோன்றும் மனையைத் துலக்குவாள்' என்றதனால், அரிவையைத் திருமகளென்றபடி; தோன்றுமனை - கடல். துலக்குவாள் - விளங்கச் செய்வாள்; இது பாண்டிநாட்டு வழக்கு.

உ௭௩ - ௪. இவற்றிற் கடலிலுள்ள பொருள்களையே உவமைகூறியிருத்தல் காண்க.

உ௭௫. திறல் இக்கு வேளுக்கு - மன்மதனுக்கு. [உக.

உ௭௭. மூவேழ் நரம்பு-இருபத்தொரு நரம்பில்; பேரியாழுக்கு நரம்பு,

உ௮௦. பண்கள் நூற்றுமூன்றென்பதைச் சிலப்பதிகாரத்தாலுணர்க.

உ௮௨. ஞாலம் உழுத. உ௮௩. தாளிற்குக் கண்மலரை இடந்த.

உ௮௪. சூல நா - சூலப்படையின் தலை.

௨௮௫. சிறந்தமை பாடிநர சிங்கவெறி பஞ்சாப்
பறந்தமை யெவ்வெவையும் பாடி - அறந்தான்

௨௮௬. வழுவு மிராவணனை மாய்த்த கொலையைக்
கழுவு மருள்பாடுங் காலைத் - தொழவந்தோர்

௨௮௭. பாரேழும் வெற்பேழும் பாய்பரியே ழுஞ்சூழு
நீரேழுங் காரேழு நோரார்ப்பப் - பேராப்

௨௮௮. பெருகு கணைகடலும் பேரியு மார்ப்ப
வருகுகனை யீன்றோன் வரலும் - கரியபிடிக்

௨௮௯. கன்று நடந்தருகே காமாரி யைத்தொழல்போற்
சென்று நடந்திருதாள் சேவித்தாள் - நின்றிறைவன்

௨௯௦. காயஞ் சிவந்த கவின்கண் டுருகினாள்
தாயஞ் சிவந்தருகே தாங்கினாள் - மாயன்றன்

௨௯௧. சின்ன மகன்றான் றிருந்திழைமுன் றோன்றினான்
முன்ன மகன்றான் முழுமுதலோன் - பின்னொருத்தி

## தெரிவை.

௨௯௨. பேர்திகழ் பேரிளம் பெண்ணையெல்லா மாடவருக்
கூர்திக ளாக்கு மொருதெரிவை - பேரிருட்கும்

௨௯௩. நாடிய திங்களுக்கு நல்லறிவு வந்துறவு
கூடிய தன்ன குளிர்முகத்தாள் - நீடாழி

௨௯௪. பண்டு பிரிந்த பவளமு முத்துமெதிர்
கண்டுகலந் தன்ன கனிவாயாள் - பன்னடைமக

௨௯௫. மேருவு மந்தரமும் வெண்கயிலை போலீசன்
சேரு மிடமாய்ச் சிறந்திருக்கப் - பாரில்

---

௨௮௭. 'காரேழுநின்றார்ப்ப' என்றும் பாடம்.

௨௮௬-௭. தொழவந்தார் ஆர்ப்ப.

௨௮௮. வருகுகனை ஈன்றோன் - ஸ்ரீராமநாதர்.

௨௮௯. காமர் அரி - அழகிய சிங்கம். ௨௯௦. தாய் அஞ்சி வந்து.

௨௯௧. சின்ன மகன் - சிறியபிள்ளை; மன்மதன்; "சின்னவிடைப்பாகா" காசிக்கலம்பகம், ௭௯; "பொறுத்தசின்ன விடையாரும் பொருந்து சினவிடையாரும்" அருணைக்கலம்பகம், ௭௧.

௨௯௨. பேரிளம் பெண்ணையெல்லாம் - பெரிய இளைய பெண்களையெல்லாம்; பேரிளம் பெண்களையெல்லாமென்பதுமொன்று. ஊர்திகளாக்கல் - மடல்மாவாகச் செய்தல்; இவளைக்கண்ட ஆடவர் மடலேறுவரென்றபடி.

௨௯௪. முத்து பற்களுக்கு உவமை.

௨௯௬. சிவந்தமுனை யூசியொன்றி னின்றிரண்டு வெற்புந்
தவஞ்செய் தனைய தனத்தாள் - சிவந்தவிரற்

௨௯௭. பத்துப் பவழங் கனையும் பழமென்று
கொத்துங் கிளிபோலுங் கூருகிராள் - எத்திசையும்

௨௯௮. காலனடத்துங் கருமேதி யின்கொம்பு
போல னெரித்த புருவத்தாள் - ஆலவட்டம்

௨௯௯. கொப்பாக வேள்பிடித்துக் கொண்டாடு மொன்னூச
லொப்பாக நின்றாடு மொண்குழையாள் - மெய்ப்பாகுஞ்

௩௦௦. செய்குன்றின் மேலிருந்து சேடியர் தற்சூழ
மொய்குன்றம் வென்ற முகிலன் முலைக்கும் - பெய்கின்ற

௩௦௧. மஞ்சைப் பொருத மலர்க்குழற்கு மால்கொண்டார்
நெஞ்சைப் பொருததிரு நெற்றிக்கும் - கஞ்சந்

௩௦௨. தகுமான நீங்கவென்ற தாளுக்கு மன்று
வெகுமானஞ் செய்யும் விதம்போல் - நகையாய்த்

௩௦௩. துலங்காரஞ் சீதேவி சுட்டிசிலம் பாதி
யலங்காரஞ் செய்யு மளவில - இலங்கிய

௩௦௪. கூவிரியால் விண்விரியக் கூரா ழிகள்பதிந்து
பாவிரி சேடன் படம்விரியத் - தேவருல

௩௦௫. கச்சாணி யந்தே ரணிகுடைக்கு மப்பாலே
கைச்சா ணிருசாணே காணுமென - முச்சகமுங்

௩௦௬. கோத்த மகமேருக் கூண்டனைய தேர்மீதில்
வாய்த்தமக தேவன் வரல்கேட்டாள் - பூத்த

---

௨௯௬. ஊசி, உரோமாவலிக்குவமை.

௨௯௯. "காழி, மெய்ப்பானை மேவியமாந்தர் வியந்தாரே" தேவாரம்.

௨௯௮ - ௯. கொப்பு - ஒருவகைக்காதணி; கொப்பு ஆலவட்டமாக.

௩௦௦-௩௦௩. தனத்திற்கு ஆரம், கூந்தற்குச் சீதேவி, நெற்றிக்குச் சுட்டி.

௩௦௧ - ௩. தகுமானம் - தக்க பெருமை. கஞ்சம் நீங்க. நகையாய் - பல்லையொத்து. ஆரம்-முத்தமாலை. சீதேவியென்பது தலையணிகளுள் ஒன்று.

௩௦௪. கூவிரி - தேர்க்கொடிஞ்சி. பாவிரி - டாக்களில் விரிந்த.

௩௦௪ - ௫. "அலர்கதிர் ஞாயி றாறு மணிநெடுந் தேர்க்கொடிஞ்சி, விலகுற வதிர்ருக் காமன் மேவள வொருசா ணிரப, பலர்புகழ் மணிமாடத்துப் பரக்குமொண் கிளியொ டுங்கி, னிலைசெரு கியபசும்பூந் தோரண மிசைய வார்த்தார்" (பிரபுலிங்கலீலை, சூனியசிங்காதனத்திலிருந்தகதி, ௯) என்பதை இக்கண்ணிகளின்பொருள் நினைப்பிக்கின்றது.

௩௦௬. கூண்டு - கூடு.

௩0எ. கமலங் கதிரோனைக் கண்டலரு மன்றே
அமலன் வரல்கேட் டலர்ந்தாள் - உமைபாகன்

௩0அ. புந்தியில் வாழப் புறந்தேடு மாந்தரைப்போல்
வந்தியர் சூழ மறுகடைந்தாள் - சந்தித்தாள்

௩0௯. சங்கங் கடைந்தணியுங் காழ்குழைப் பெம்மானை
அங்கங் கடைந்தா ரயனிற்ப - வெங்கஞ்சன்

௩௧0. காட்டு மலரைவென்ற கண்ணன் கரமலர்
சூட்டு மலரைத் தொழுதிரந்தாள் - ஏட்டையுறும்

௩௧௧ அன்ன மறியாம லாகமெலா மென்பானீர்
பின்னைமால் வேதனையும் பெற்றீரே - முன்னியபே

௩௧௨. ராசை யுடையீரே யண்டருக்குத் தோற்றீரே
மாசு மதியைவெல்ல மாட்டீரே - யீசரே

௩௧௩. தென்றலோ வட்ட திருமேனி தீண்டிவிடு
மென்றலோ வெம்பணிமெய் யெலாமணிந்தீர் - வென்றி

௩௧௪. மதனை யெரித்தீரே மாதிடஞ்சேர் காம
மதனை யெரித்திடவொண் ணாதோ - விதனஞ்சேர்

௩௧௫. கொள்ளை யிடமாங் குழலோசைக் காவேய்க்குப்
பிள்ளை புகுந்து பிழைத்தீரே - வெள்ளை

---

௩0அ. வந்தியர் - புகழ்ந்துபாடுவோர். ௩0௯. கஞ்சன் - கம்ஸன்.

௩௧0. காட்டு மலரை - காட்டியமல்லர்களை. கரமலர், எழுவாய். ஏட்டை - இளைப்பு.

௩௧௧. அன்னம்-அன்னப்பறவை, உணவிற்குரிய அன்னம். மால் வேதனையும்பெற்றீர் - திருமாலையும் பிரமதேவரையும் பெற்றீர்; உணவில்லாமையால் இளைத்தீர், மயக்கத்தையும் வேதனையையும் அடைந்தீரென்பது மற்றொரு பொருள்.

௩௧௨. ஆசையுடையீர் - திக்காகிய உடையையுடையீர்; இச்சையுடையீர். அண்டருக்குத்தோற்றீர் - தேவருக்குப் புலப்படீர்; பகைவருக்குத் தோல்வியுற்றீர்.

௩௧௩. என்றலோ - என்றல்லவோ; அலோ - அல்லவோவென்பதன் மரூஉ; "என்கவிதை, இன்றலோ ராசசபைக் கேற்றநாள்" தனிப்பாடல். பணி - பாம்பு; அது காற்றைப்புசிப்பது; "நீரணிந்த வரவிருக்க நெடியதென்றன் மூடுகுமோ" அருணைக்கலம்பகம், ௫௧.

௩௧௪. 'மாது' எனத் தன்னைப் படர்க்கையாற் கூறினள்.

௩௧௫. 'வேய்க்குப் பிள்ளைபுகுந்து' என்றது, திருநெல்வேலியில் மூங்கிலடியில் முளைத்ததனை; இதனால் சிவபெருமான் வேயீன்றமுத்தென்று பாராட்டப்பெறுவர்.

௩௧௬. அயில்வாயி லுங்கொடிதென் றல்லவோ கூவுங்
குயில்வாய் தனைநெரித்தீர் கூறீர் - கயல்பாய்ந்
௩௧௭. திமைக்குங் கடலேழி லேகாந்த ராமன்
அமைக்குங் கடல்பார்த் தமர்ந்தீர் - உமைக்கொம்
௩௧௮. பிசையு மொருபா லிராதுவிடை யேறீ
ரசையுமணி யோசைக்கா வன்றோ - திசைதோறு
௩௧௯. மாலைப் பொழுதடரும் வந்திப் பொழுதென்றே
காலைப் பொழுதையொரு கண்வைத்தீர் - ஞாலத்தில்
௩௨௦. நும்ம விரக நுமக்கிவ்வா றாமாகி
லெம்ம விரகமெமை யென்செய்யா - திம்மெனவந்
௩௨௧. தாளீர் புயத்தி லணையீர் படிந்துயரங்
கேளீ ரெனநெருங்கிக் கிட்டிடினும் - வேள்போருந்
௩௨௨. தேராமல் மாலையருள் செய்யாமற் றேரானுந்
தாரானு நானென்றே தானகன்றான் - ஊரறிய
௩௨௩. அன்றுந் தனித்தா ளிலம்புகுந்தா ளவ்வாறே
யின்றுந் தனித்தா ளிலம்புகுந்தாள் - நன்றென்று

பேரிளம்பெண்.

௩௨௪. கைத்தகாய் தின்று கனியை மூனிவார்தம்
பித்தகல வந்துதித்த பேரிளம்பெண் - பொய்த்த
௩௨௫. வலரை விரும்பா தரும்பை விரும்புஞ்
சிலரை மயறீர்க்குந் தெய்வம் - கலைமதியை
௩௨௬. விண்கூடு பாம்பருந்தி வெண்பிறையைத் தீண்டாமை
கண்கூடாத் தன்மேன்மை காட்டுவாள் - பண்கூட
௩௨௭. மூவரும் பாடு முதுதமிழின் பத்தால்
மேவருந் தன்பருவ மேம்படுவாள் - காவிரிவாய்ச்

௩௧௭. ஏகாந்தராமன் அமைக்கும் கடல் - இராமர் ஒலியை அடக்கிய கடல்; அஃது ஏகாந்தராமநகரத்தைச் சார்ந்தது; ௧௪-ம் கண்ணிக்குறிப்பைப் [பார்க்க.
௩௧௮. அசையும் மணி - விடையின் கழுத்திற் கட்டியமணி.
௩௧௯. இப்பொழுது வந்து மாலைப்பொழுது அடரும். காலைப்பொழுது - சூரியன்.
[யுடையான், கொடான்.
௩௨௨. தேரான் - தேரை உடையான், அறியான். தாரான் - மாலையை
௩௨௫. கலைமதி - பதினாறுகலைகளையுடைய மதி; பூரணசந்திரன்.
௩௨௬. கண்கூடு-பிரத்தியக்ஷம். ௩௨௭. முதுதமிழ்-தேவாரங்கள்.

௩௨௮. சென்று திருவானைக் காவிற் சிவனைமதக்
குன்று வணங்கக் குனிந்ததோ - நின்றநிலை

௩௨௯. விட்டுத் திசைக்களிற்றை வெல்லவென்று காஞ்சிபுர
மட்டு மொருபயணம் வந்ததோ - இட்டிடைதான்

௩௩0. என்று முறியா திருக்கத் தலைகீழா
நின்று தவஞ்செய்யு நீர்மையோ - வொன்றோடொன்

௩௩௧. றெய்யா வழக்கிட் டெதிரே மறிப்பிருந்து
பொய்யா நடுநிலையிற் போவதோ - மையாற்

௩௩௨. றகைந்த வடிக்கனத்தைத் தத்த முகங்கள்
பகுந்தெடுத்துக் கொண்ட படியோ - மிகுந்துவரும்

௩௩௩. தொண்டருக்கா மூர்க்கர் துணிந்தாடுஞ் சூதுகள்போய்ப்
பண்டு வயிற்றிற் படிப்பதோ - விண்டு

௩௩௪. புகழ்ந்திடும் போதுநின்ற போர்மா ருதிபோல்
முகங்கவிழ்ந்த கொம்மை முலையாள் - மகிழ்ந்துவரும்

௩௩௫. வேட்டுணை யாடவரை வென்று சயங்கொள்ளத்
தோட்டுணை தேடுந் துணைக்குழையாள் - நாட்டுறையும்

௩௩௬. மாந்தரையுந் தேவரையும் வாளமர் செய்வதற்குக்
கூந்தலரண் போய்ப்பார்க்குங் கூர்விழியாள் - வாய்ந்த

௩௩௭. பளிக்கு நிலத்தும் பதித்திடுகண் ணாடி
விளக்கு மொளிப்பசும்பொன் வீட்டும் - ஒளித்தொளித்துப்

௩௩௮. பூவைய ரன்பு பொருந்தவிளை யாடுங்கால்
தேவை யரன்பவனி செப்பினார் - பாவை

---

௩௨௮. மதக்குன்று - யானை.

௩௨௯. காஞ்சிபுரம் - காஞ்சீநகரம், காஞ்சியென்னும் ஆபரணத்தை யணிந்த இடை.

௩௩௧. எய்யா - இளையாத. மறிப்பு இருந்து - மறிபலிருந்து. நடுநிலை- இடையுள்ள இடம், நடுவுநிலைமை.

௩௩௨. பகுந்து - பங்கிட்டு.

௩௩௩. மூர்க்கர் - மூர்க்கநாயனார். விண்டு - இராமர்.

௩௩௫. வேள் துணை - மன்மதனையொத்த.

௩௩௬. கூந்தல் அரண் - கூந்தலாகிய காட்டரண்.

௩௩௮. தேவை அரன் - இராமநாதர்.

௩௩௯. பழுதாதல் கூறாத பண்டை மறைபோ
லெழுதாத வேற்கண் ணிணையும் - எழுபிறவி

௩௪0. வேலை யகன்று விடுஞ்சைவர் போன்றுதிரு
மாலை யகன்ற மலர்க்குழலும் - சேலுமுறும்

௩௪௧. முன்னவரை வெல்லு முனைப்படைவேள் போற்கரும்பு
தன்னை வரையாத் தனதடமும் - மன்னினாள்

௩௪௨. என்ன விருக ளெழுதாண் மலர்முடியாள்
கன்ன லெழுதாள் கடிதெழுந்தாள் – அன்னங்கள்

௩௪௩. பின்பதறி வானைவிட்டுப் பேர்ந்தோடச் சென்றானுள்
ளன்பதறி வானை யடிபணிந்தாள் - வன்பிலங்கை

௩௪௪. ஏற்றமுறு வேந்து மிருவர் முயலகருங்
கூற்றமு மஞ்சுங் குறைநகமும் - தோற்றுபுலி

௩௪௫. தான்முக னஞ்ச தளருந் திருவரையு
நான்முக னஞ்ச நகநுனியும் - கூன்முதுகுக்

௩௪௬. கச்சபமும் வெள்ளைக் கருமாவும் பச்சைநிற
மச்சமு மச்சமுறு மார்பிடமும் - உச்சமுறும்

௩௪௭. முப்புர மஞ்ச முறுவலுங் காமவே
ளப்புர மஞ்ச மணிநுதலு - மொப்புரையா

---

௩௩௯. எழுதாத - மை எழுதப்படாத.

௩௪0. திருமாலை - விஷ்ணுவை, அழகிய பூமாலை.

௩௪௧. வரையா - எழுதாத, நீக்காத.

௩௪௨. கன்னல் - கரும்புத்தொய்யில்.

௩௩௯ - ௪௨. கண்ணிணைகளில் மையெழுதாள், குழலில் மலர்முடியாள், தனதடத்திற் கன்னலெழுதாளாய்.

௩௪௩. பின் பதறி. அன்பது அறிவானை.

௩௪௪. வேந்து - இராவணன். இருவர் முயலகர் - முயலகனென்னும் அசுரன், முயலை அகத்தேயுடைய சந்திரன்.

௩௪௫. முகன் நைந்சு தளரும்-முகம் நைந்து தளருதற்குக் காரணமான.

௩௪௬. வெள்ளைக்கருமா - சுவேதவராகம்.

௩௪௭. அப்புரம் - அந்த உடம்பு; அழகிய உடம்பும் அம்பினது உரமுமாம்; புரம் - உடம்பு.

௩௪௮. மோகப் பணியு முதிர்பணியும் பாரிருளு
மாகத் திருளு மடர்விழியும் - லோகம்

௩௪௯. முடிச்சிட்ட நாளின் முகுந்தனயன் சென்னி
முடிச்சிட்ட மாலை முடியுந் - துடிச்சிட்ட

௩௫௦. விண்ணவ ரஞ்சுமந்த வெண்பொடிப் பூச்சுமன்ப
ரெண்ண வரஞ்சுமந்த வின்னருளுங் - கண்ணாக்

௩௫௧. காண்டோறுங் காண்டோறுங் காயங் களிப்பெய்திப்
பூண்டோறும் பூண்டோறும் பூட்டவிழ்ந்தாள் - ஆண்டவரை

௩௫௨. மாற னடித்த மதுரையிலே யஞ்சாமல்
மாற னடித்த மதம்பாரீர் - நீறணியும்

௩௫௩. வெட்ட வெளியாரா மேனியா ரோரிடையன்
வெட்ட வெளியாராய் விட்டாரோ - முட்டவருள்

௩௫௪. தங்கலா லேறு தணவார்க்குச் சாக்கியனார்
தங்கலா லேறு சகித்ததோ - இங்கிவர்க்குக்

௩௫௫. கண்ணிடந் தப்புமெனக் காலா லுதைத்தொருவன்
கண்ணிடந் தப்புவதுங் காதலோ - பெண்ணமுதம்

---

௩௪௮. மோகப்பணி - மோகமாகிய பாம்பு. முதிர்பணி - முதிர்ந்த இராகுகேதுக்களாகிய பாம்புகள். பாரிருள் - புறவிருள். ஆகத்திருள் - அகவிருள். விழிகள் சோமசூரியாக்கினிகளாதலின், பணிமுதலியவை அஞ்சுவனவாயின.

௩௪௯. முடிச்சிட்டநாள் = முடித்திட்டநாள் - அழித்த காலம். முடிச்சிட்ட = முடித்திட்ட - கட்டிய. துடிச்சு - துடித்து. இட்டம் - இஷ்டம்.

௩௫௦. விண்ணவர் அஞ்சும். எண்ண வரம் சுமந்த.

௩௫௧. ஆண்டவர் - சோமசுந்தரக்கடவுள்.

௩௫௨. மாற னடித்த மதுரை. மாறன் அடித்த மதம் - பாண்டியன் அடித்த செருக்கு.

௩௫௩. வெட்ட வெளியாராம் மேனியாரெனவும் வெட்ட எளியாராயெனவும் பிரிக்க ; "வேயீன்ற முத்தர்தமை வெட்டினானேயிடையன்" என்பது இரட்டையர் பாடல். இடையன் வெட்டியது திருநெல்வேலியில் நிகழ்ந்த செய்தி.

௩௫௪. ஏறு தணவார்க்கு - இடபத்தை நீங்காதவர்க்கு. சாக்கியனார் தம் கல்லால் எறிந்தது.

௩௫௫. கண் இடம் தப்புமென. ஒருவன் - கண்ணப்பநாயனார். கண் இடந்து அப்புவதும். பெண்ணமுதம் - உமாதேவியார்.

௯௫௬. அங்கிதஞ் செய்த துபோ லங்கைவளை யான்முலையா
லங்கிதஞ் செய்த தடுக்குமோ - இங்கிதந்தான்

௯௫௭. என்னென்று நைந்தா ளிறைவர் திருமேனி [றுங்
பொன்னென்றல் பூவென்றல் பொய்யென்றாள் - பின்னொன்

௯௫௮. கூறத் தரமன் றெனக்குழைந்தாள் கொன்றையின்மே
லாறத் தரமன்றென் றுசையென்றாள் - மாறற்ற

௯௫௯. அம்புயத்தாள் போல்வா ளருளுமழ குங்கண்டு
செம்புயத்தாள் மாலை சிறிதளித்து - நம்பெருமான்

௯௬௦. பாரிறைவ னும்பர் பதியிறைவன் றென்றேவை
யூரிறைவன் போந்தா னுலா.

வாழி.

சேது நகர்வாழி தீர்த்தங்கள் வாழிகந்த
மாதனம் வாழிபர மன்வாழி - காதலித்தாய்
வாழி சிவசமயம் வாழிதலத் தார்வாழி
வாழிமனு வேந்தன் வளம்.

தேவையுலா முற்றிற்று.



இராமநாதர் திருவடித்தாமரைகள் துணை.

---

௯௫௬. அங்கு இதம் செய்ததுபோல். அங்கிதம் செய்தது - அடையாளஞ்செய்தது; "மைவார் வளையம் வனமுலையும் பெற்றோர்" என்றார் முன்னும்; ௪௦௨.

௯௫௭. 'என்னென் றணைந்தாள்' என்றும் பாடம்.

௯௫௯. செம்புயத்து ஆள் மாலை.

இராமநாதர் துணை.